# குலசேகராழ்வார் வளர்த்த பக்திப் பெரும் பயிர்

ம. லோகநாயகி
எம்.ஏ., எம்.ஃபில்.,

சாரதா பதிப்பகம்
1, போயர் வீதி,
திருத்தணி - 631 209,
செங்கை மாவட்டம்.

THIS BOOK IS PUBLISHED WITH THE FINANCIAL ASSISTANCE OF TIRUMALA TIRUPATI DEVASTHANAMS UNDER THEIR SCHEME: AID TO PUBLISH RELIGIOUS BOOKS.

# குலசேகராழ்வார் வளர்த்த பக்திப் பெரும் பயிர்

ம. லோகநாயகி
எம்.ஏ., எம்.ஃபில்.,

சாரதா பதிப்பகம்
1, போயர் வீதி,
திருத்தணி - 631 209,
செங்கை மாவட்டம்.

முதற் பதிப்பு: ஜூலை, 1988
உரிமை ஆசிரியர்க்கு
1,000 பிரதிகள்

விலை: ரூ. 15-00

மாருதி பிரஸ்,
173, பீட்டர்ஸ் ரோடு,
சென்னை-600 014.

## காணிக்கை

திருவேங்கடவன்
திருக்கமலப் பாதங்களுக்கு
அர்ப்பணமாய் சமர்ப்பிக்கின்றேன்
இந்நூல் மலரை.

# அணிந்துரை

மனத் தூய்மையே வாழ்வின் குறிக்கோள். இதனையே 'அறம்' என்பர் திருவள்ளுவர். இந்த மனத் தூய்மையை அடைதற்கு மானுடம் பல வழிகளில் முயன்றது; இன்றும் முயன்று கொண்டிருக்கிறது; நாளையும் முயலும்.

இந்த முயற்சி பல்வேறு வகையாகப் பரந்து விரிந்து பல்கி வளர்ந்துள்ளது. அக முயற்சி ஒருபால்; புற முயற்சி இன்னொருபால். அக முயற்சிகளுள் பக்தி நெறியும் ஒன்று. அழுக்காறு, அவா, வெகுளி, இன்னாச் சொல் என அக அழுக்குகளாக, அவற்றின் வெளிப்பாடமாக வள்ளுவர் நான்கைக் குறிப்பிடுகின்றார். காம, குரோத, மதம் முதலான அறுவகை அழுக்குகளை இந்து சமயச் சான்றோர் எண்ணிப் பார்த்துள்ளனர். இந்த அழுக்குகளின் வேர் அவா அல்லது ஆசையாகும். 'ஆரா இயற்கை அவா' என்கின்றார் பொய்யாமொழியார். 'ஆசைக்கோ ரளவில்லை' என்பது தாயுமானவர் தெளிந்த சொல். இந்த வேரைக் களைந்தால் அழுக்காறு முதலிய கிளைகளோடு கூடிய அக அழுக்கு மரம் அடியோடு சாயும். ஆனால், அது எளிதன்று; இயற்கையுமன்று.

உயிரில் இயல்பாக அமைந்துள்ள அவாவை, தன்னல உணர்வை ஆண்டவனுக்கு உரியதாக ஆக்குதல் இன்னொரு வழி. இதுவே பக்தி நெறியாகும்; அழுக்கு மரத்தை, அவாவின் வேரைத் திருத்திப் பணி கொள்ளும் இயல்பு நெறி இது.

'ஆசை' அல்லது 'அவா' நான் என்ற உணர்வு அடிப்படையில் என் தாய், என் மகன், என் தலைவன், என் தலைவி, என் ஆண்டான் என்றிவ்வாறு பலவாய் பல்கி முளைத்துக் கிளைக்கின்றது. இந்த மகன்மை, தாய்மை, தந்தைமை, தலைவியாம் தன்மை, அடிமையாம் தன்மை என்னும் குறுகிய வட்டத்தினுள் சுழலும் உணர்வுகளையெல்லாம் மடைமாற்றிப் பக்தி மயமாக்கும் வித்தையொன்றை முதன்முதலில் தமிழ்ச் சான்றோர் கண்டனர். அச் சான்றோர்களுள் திருமால் அன்பில் ஆழங்கால் பட்ட குலசேகராழ்வார் தலையாயவர் ஆவர். குறுகிய வட்டத்துக் குடும்ப உணர்வுகளை யெல்லாம் குவலயம் கடந்த பக்தி உணர்வாகப் பண்படுத்தியளித்த பெருமை அவர்க்கே உரியது.

தாம் பாடிய பெருமாள் திருமொழியில் இந்த உணர்வுகளெல்லாம் இருளிரிய, தேட்டருந்திறல், மெய்யில் வாழ்க்கை, ஊனேறு, தருதுயரந் தடாயேல், ஏர் மலர்ப் பூங்குழல், ஆலைநீள் கரும்பு, மன்னுபுகழ் வன்தாளினிணை, 'அங்கணெடுமதிள் என்னும் பத்துப் பதிகங்களில் அழகாக எடுத்துரைக்கப் பெற்றுள்ளன. இந்தப் பக்திப் பாங்கை, பைந்தமிழ்ப் பயிரைப் பக்திப் பயிராகக் கண்டு அதன் விதையை, வேரை, கிளைகளை, பூ பிஞ்சுகளை, காய் கனிகளை, வளர்த்த மண்ணை, வளர்த்த நீரை, வாய்த்த எருவை எல்லாம் இன்னின்ன இன்னின்ன எனக் கண்டு எடுத்துரைக்கும் பாங்கில் இந்த நூல் பக்தி-விளக்கம், குலசேகரர் வாழ்வும் வரலாறும், குலசேகராழ்வார் பாசுரங்களில் பக்தி, பெருமாள் திருமொழியில் திருமாலவதாரங்கள், குலசேகரர் பாசுரங்களில் வைணவத் திருத்தலங்கள்

பக்தர் குலசேகரரின் கலை நலன் என்னும் வகைப் பாடுகளுள் அமைத்துச் செல்கிறது.

இந்நூலாசிரியர் திருவளர் லோகநாயகி அவர்கள் இளமையிலிருந்தே தமிழின்பால் ஆரா அன்பு கொண்டவர். பள்ளி நாட்களிலும் கல்லூரி நாட்களிலும் தமிழ் மொழி, இலக்கிய, எழுத்து, பேச்சுப் போட்டிகளில் வெற்றி கண்டு பரிசு பல பெற்றவர். கவிதை பல எழுதி சிறப்பு பல பெற்றவர். திருவேங்கடவன் பல்கலைக் கழகத்தில் முதுகலை பயின்ற காலத்து முதன்மையில் தேறித் தங்கப் பதக்கங்கள் இரண்டு பெற்றவர். தம் ஈடுபாட்டின் காரணமாக வைணவ இலக்கியத்தில் எம்ஃபில் ஆய்வு செய்து பட்டமும் வாய்க்கப் பெற்றார். இப்போது திருமங்கையாழ்வார் பாசுரங் களைப் பிஎச். டி., ஆய்வுக்கு மேற்கொண்டு பயின்றுவருகிறார்.

இத்தகு நலம் பல பெற்ற திருவேங்கடத்துச் செல்வி திருவளர் லோகநாயகி அவர்களின் முதல் நூல் இந்நூல். மொழி பெயர் நேயத்தே உருவாகிய இந்தப் பக்திப் பயிரை தமிழகம் தமிழ்ச் சான்றோர் தமிழின்பால் ஈடுபாடு கொண்டோர் வைணவப் பெருமக்கள் அனைவரும் ஏற்றிப் போற்றுவதன் வழி ஒரு நல்ல தமிழ் எழுத்தாளரை இலக்கிய பெருமைக்கு உரியவராகுமாறு வேண்டிக்கொள் கிறேன்.

முனைவர். பொன். சௌரிராசன்,
எம்.ஏ., பிஎச்.டி.,
பட்டயம் (மொழியியல்)
பேராசிரியர், தமிழ்த் துறை,
திருவேங்கடவன் பல்கலைக் கழகம்,
திருப்பதி-517 502. (ஆ. மா.)

# ஒரு சொல்

பள்ளிப் பருவத்திலிருத்தே
பழகு தமிழ்மீது
ஏழைக்குப் பற்றுண்டு;
பாசமுண்டு;
காதலுண்டு.
என்றமிழ் காதலுக்கு
எருவிட்டு உரமிட்டு
நான் வளர எனை வளர்த்த தமிழாசிரியர்கள்
திரு செ. உலகநாதன் அவர்கள்,
திரு. ந.அ. மாலிக் அவர்கள்,
இவர்களுக்கு என்றும்
நான் நன்றியுடையேன்.

புன்னகை நிலவாம்
புத்தமிழ் ஒளியாம்
தண்தமிழ் வித்தகர்
தந்தையாம் அன்னையாம்—எனை
பெற்ற அன்னையினும்
சாலப் பரிந்தூட்டி
அணிந்துரை தந்து வாழ்த்தும்

எமது பேராசிரியர்
திரு. பொன். சௌரிராசன்
அவர்களுக்கு
இவளின்
இதயத் தோட்டத்தின்
நன்றி மலர்கள்
அர்ப்பணம்- சமர்ப்பணம்.

என்
ஆய்வுப் பணிக்கு
வழிகாட்டி
வாழ்க்கைப் பாதைக்கு
ஒளியூட்டி
உதவியருளிய
எனது வழிகாட்டி
பேராசிரியர்
திரு. ந. தர்மாரெட்டி அவர்களுக்கு
எனது உளமார்ந்த நன்றி உரித்தாகுக.

இவ்வாய்வேடு சிறக்கப்
பலநிலைகளிலும்
உதவியருள
எத்துறை பேராசிரியப் பெருமக்களுக்கு
எனது இதயங்கனிந்த நன்றி.

மற்றும்
நன்முறையில்
அச்சிட்டு உதவிய
மாருதி அச்சகத்தார்க்கும்
இது
நூல் வடிவுபெற
பொருளுதவி புரிந்த
திருவேங்கடவன் தேவத்தானத்தார்க்கும்
யான் பெரிதும்
கடப்பாடுடையேன்.

திருத்தணி

ம. லோகநாயகி

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| ஆ.இ. | — | ஆசாரிய இருதயம். |
| ஆ.ச. | — | ஆழ்வார்கள் சரித்திரம். |
| உரை. | — | உரையாசிரியர். |
| கழகம். | — | திருநெல்வேலி சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம். |
| குறள். | — | திருக்குறள். |
| சில். | —. | சில்லரை ரஹஸ்யங்கள். |
| செம். | — | செம்பொருள். |
| த.ஆ. | — | தமிழாக்கம். |
| தொ.ஆ. | — | தொகுப்பாசிரியர். |
| தொ.மொ. | — | தொகுத்து மொழிபெயர்த்தவர். |
| ப. | — | பக்கம். |
| ப.ள். | — | பக்கங்கள். |
| ப.ஆ. | — | பதிப்பாசிரியர். |
| பரிசோ. | — | பரிசோதகர். |
| பரி. | — | பரிபாடல். |
| பிர. | — | பிரகாசர். |
| பெரு.திரு. | — | பெருமாள் திருமொழி. |
| பொ.ப.ஆ. | — | பொது பதிப்பாசிரியர். |
| மொ.பெ.ஆ. | — | மொழிபெயர்ப்பாசிரியர். |

## உள்ளடக்கம்


| | | |
|---|---|---|
| முன்னுரை | | xiv |
| இயல் ஒன்று — | பக்தி—பக்தி வகைகள் | 1 |
| இயல் இரண்டு— | குலசேகரர் வாழ்வும் வரலாறும் | 16 |
| இயல் மூன்று — | குலசேகராழ்வார் பாசுரங்களில் பக்தி | 26 |
| இயல் நான்கு — | பெருமாள் திருமொழியில் திருமாலவதாரங்கள் | 62 |
| இயல் ஐந்து — | குலசேகரர் பாசுரங்களில் வைணவத் திருத்தலங்கள் | 77 |
| இயல் ஆறு — | பக்தர் குலசேகரரின் கலை நலன் | 102 |

# முன்னுரை

## ஆய்வுப் பொருள்

1 உலக உயிர்களுக்கு என்றும் உண்மையான பொருளாய் விளங்குவது பரம்பொருள் ஒன்றே. இவ்வுலகிலுள்ள அனைத்துச் சமயங்களும், அவ்வுண்மைப் பொருளை அறிந்து அடைவதற்கே நம்மை வழி நடத்திச் செல்கின்றன. அவ்வுண்மைப் பரம்பொருளை வைணவர் 'திருமால்' என்பர். எனக்குச் சிறுபிராயத்தி லிருந்தே திருமால்மீது பக்தியும், ஈடுபாடுமுண்டு. திருமாலினது அருளினால் நான் திருவேங்கடவன் பல்கலைக்கழகத் தமிழ்த் துறையில் சேரும் வாய்ப்பினைப் பெற்றேன். முதுகலையில் விருப்பப்பாடமாக வைணவத் தைக் கற்கும் வாய்ப்பினைப் பெற்றேன். ஆழ்வார்கள் பன்னிருவரின் ஆழ்ந்த திருமால் பக்தி என் உள்ளத்தை மிகவும் ஈர்த்தது. ஆழ்வார்கள் பன்னிருவருள் இராம பிரானிடத்துப் பித்தேறிய நிலையில் பக்தி ஈடுபாடுடையவ ரான குலசேகராழ்வாரிடத்து என் மனம் அதிகம் ஈடுபட்டது. என் நாட்டத்திற்கு, திருவேங்கடவன் பல்கலைக்கழக தமிழ்த்துறைப் பேராசிரியர் டாக்டர் பொன். சௌரிராசன் அவர்கள் பெரிதும் துணை புரிந்தார். குலசேகரர் தம் பக்தி நிலையை அவருடைய பாசுரங்களின் துணை கொண்டு நிறுவும் பொருட்டு மேற் கொள்ளப்பட்ட சிறு முயற்சியே இவ்வாய்வேடு.

## ஆய்வு நோக்கம்

இவ்வாய்வேடு இ[redacted]டு நோக்கங்களைக் கொண்டு அமைகின்றது. ஒன்று[redacted]லசேகரரின் பக்தி நிலையினை

உலகுக்கு வெளிப்படுத்திக் காட்டி, மக்கள் நெஞ்சங்களில் அவருக்கும் ஓர் உயர்ந்த இடம் அளிக்கப்பட வேண்டும் என்பது. மற்றொன்று வைணவத்திற்குச் சிறப்பாக வைணவத் தமிழுக்கு ஒரு சிறிதேனும் பணிசெய்யவேண்டும் என்பது.

## ஆய்வு மூலம்

இவ்வாய்வுக்கு மூலமாக அமைவது குலசேகராழ்வார் பாடிய பெருமாள் திருமொழிப் பாசுரங்களாகும். இப் பாசுரங் கள் மொத்தம் நூற்று ஐந்தாகும்.

## ஆய்வின் அமைப்பு

இவ்வாய்வேடு முன்னுரை நீங்கலாக ஆறு இயல்களைக் கொண்டு அமைகின்றது.

## இயல் ஒன்று—பக்தி, பக்தி—வகைகள்

குலசேகராழ்வாரின் பக்திப் பாங்கினை அறிவதற்கு ஆதாரமாய் இவ்வியல் அமைகிறது. இதனுள் பக்தி சொல் - பொருள் விளக்கம், பக்தி வகைகள் ஆகியன விளக்கப் பெறு கின்றன.

## இயல் இரண்டு—குலசேகரர் வாழ்வும், வரலாறும்

ஆழ்வார்கள் அனைவரும், வைணவச் சம்பிரதாயத்தில் சிறந்த இடம்பெற்று விளங்குகின்றனர். ஆழ்வார்கள் பன்னிருவரில் குலசேகராழ்வாரது பிறப்பு, இளமைப் பருவம், அவர்தம் வாழ்க்கைச் சிறப்பு நிகழ்ச்சிகள், துறவு, இயற்றிய நூல்கள், காலம் ஆகிய செய்திகளை இவ்வியல் கூறுகிறது.

## இயல் மூன்று—குலசேகராழ்வார் பாசுரங்களில் பக்தி

இவ்வியல், பெருமாள் திருமொழியில் காணப்பெறும் பக்தி வகைகளை இனங்கண்டு ஆய்ந்து, குலசேகரரை சிறந்த திருமால் பக்தர் என நிறுவ முயல்கிறது.

## இயல் நான்கு—பெருமாள் திருமொழியில் திருமால் அவதாரங்கள்

இவ்வியல், முதற்கண் அவதாரங்களுக்குத் தாயகமாய் விளங்கும் சமயநிலையையும், வைணவம், சைவம் எனச் சிறப்பாக விளங்கும் இந்து சமயம் பற்றியும் தெளிவு செய்கிறது. அடுத்து, அவதாரம், நோக்கம், விளக்கம், திருமாலின் அவதாரங்கள் பற்றியும் ஆய்கிறது. பின் பெருமாள் திருமொழியில் இடம்பெற்றுள்ள அவதாரங்களின் நோக்கத்தை—சிறப்பினைப் பேசுகிறது.

## இயல் ஐந்து—குலசேகரர் பாசுரங்களில் வைணவத் திருத்தலங்கள்

வைணவத்தில் திருத்தலம், மூர்த்தி, தீர்த்தம் முதலியவற்றிற்கு முக்கிய இடமுண்டு. இவ்வியலில் திருத்தலம்—ஆலயம்—மூர்த்தி—தீர்த்தம் பற்றி கூறப்பெற்றுள்ளன. அடுத்து, இவ்வியல் திருமாலுக்குரிய திருத்தலங்கள், அவற்றுள் பெருமாள் திருமொழியில் இடம்பெறும் தலங்கள், அவற்றின் சிறப்புக்கள் ஆகியவற்றைப் பேசுகிறது.

## இயல் ஆறு—பக்தர் குலசேகரரின் கலைநலன்

எப்பொருளும் கலை உணர்வோடு அமையும்போதுதான் அப்பொருளின் முழுநோக்கம் நிறைவேறும். அவ்வகையில் பெருமாள் திருமொழியும் கலைநலன் பெற்றுக் கவினுற அமைந்துள்ளது. இதனால் திருமாலிடத்து அன்பும், அடங்காப் பக்தியும் கொண்டு, பிறரையும் தம் வழிக்குக் கொண்டுவர எண்ணும் குலசேகராழ்வாரின் எண்ணம் நிறைவேறுகிறது. இச் செய்திகளை எவ்வெவ்வகையான கலைநலன் உத்திகளால் ஆழ்வார் வெளிப்படுத்துகிறார் என்பதை இவ்வியல் கண்டு அறிவிக்கிறது.

## இயல் ஒன்று

# பக்தி - பக்தி வகைகள்

### 1.0. பக்தி—பக்தி வகைகள்

மனிதனை வையத்துள் வாழ்வாங்கு வாழ வழிவகுக்கும் நெறிமுறைகள் பல. அவற்றுள் முதலிடம் பெற்று நிற்பது பக்தி. இப் பக்தி இம் மண்ணுலகில் வாழ்வாங்கு வாழ வழி வகுப்பதோடு அவ் விண்ணுலகிலும் நல்லதொரு நிலையைப் பெற வழியாய் அமைகிறது. இவ்வியல் பக்தி சொல் விளக்கம், பொருள் விளக்கம், பக்தி வகைகள் ஆகியவ ற்றை விளக்கும் வகையில் அமைகின்றது.

### 1.1. பக்தி—சொல் விளக்கம்

'பக்தி' என்னும் சொல்லுக்கு அன்பு, ஒழுக்கம், தொண்டு, நம்பிக்கை, முறைமை, வழிபாடு, விசுவாசம், வீட்டிருப்பு முதலிய பொருள்கள் உள.[1]

'பக்தி' என்பதைப் 'பத்தி' என்றாக்கிக் கொண்டு, அதன் பொருளை நோக்கும்போது 'கலந்து நிற்றல்' என்றா கிறது. அதாவது இறைவனோடு கலந்துநிற்றலே பக்தி என்பது பெறப்படுகிறது.

அன்பின் முதிர்ச்சியாகிய 'ஆர்வம்' பக்தி என்ற பொருளிலும் வழங்கப்பட்டிருத்தல் வேண்டும்.[2] ''அறிவில மூயலும் ஆர்வமாக்கள் வழிபடு தெய்வம் கட்கண்டாங்கு'' என்னும் சங்கப்பாட்டில் 'ஆர்வமாக்கள்'—பக்தரையே குறிக்கிறது என்றும், "அன்பே தகளியா ஆர்வமே நெய்யாக" என்னும் ஆழ்வார் பாடலிலும் ஆர்வம்

குல்.—1

பக்தியைக் குறிக்கிறது என்பதே பொருந்தும் என்றும் அறிஞர் ப. அருணாசலம் கூறுகிறார்.[3]

துதி, வணக்கம் முதலியவை பக்திக்கு உரிய மறுபெயர் கள் ஆகும்.[4]

அன்பே கடவுள். இடையறாத எண்ணெய் ஒழுக்குப் போன்ற அன்புடைமையே பக்தி. அன்பு கொண்ட இதயத் தில் அறிவின் சுடர் விளங்கும். அறிவுச்சுடர் பிரகாசித்து விளங்க அடிப்படையான அன்பினைக் கொண்ட நிலையி லேயே இறைவனிடத்துப் பக்தி கொள்வதே சிறப்புடைய தாகும்.

## 1.2. பக்தி—பொருள் விளக்கம்

பக்தி செய்தல் என்பது உலக சமுதாயத்திற்குத் தேவை யான ஒரு பொதுச்செயல். எந்நாட்டாரும், எம்மொழி யாரும், எவ்வினத்தாரும் இப் பக்தியை மேற்கொள் கின்றனர். ஆயின் மேற்கொள்ளும் நிலைகளில் வேறுபாடு கள் காணவருகின்றன. ஈண்டு பக்தியைப் பற்றிய வெவ்வேறு சிந்தனைகள், வேறுபட்ட கருத்துக்கள் ஓரளவு தொகுத்துக் கூறப்பட்டிருக்கின்றன.

"இறைவனது பெருமையையும் இயல்பையும் அறிந்தபின் எழும் பெருங்காதலே பக்தி" என்று கூறுகிறார் கௌடில்யர். பிரேமை என்று நாரதரும், சிற்றின்பங்களில் இடைவிடாது மூழ்கி இருக்க அறிவிலார் நினைப்பதுபோல் இறைவன்மீது அத்தகைய இடைவிடாத ப்ரீதியை எழுப்புவதே பக்தி என்று பிரகலாதரும், உபாசனை என்று சங்கரரும் பொருள் கொண்டனர்.[5]

"இடையறாத ஈஸ்வர சிந்தனைக்குத்தான் பக்தி என்று பெயர். இதில் அன்பு ரொம்பவும் முக்கியம். அன்போடு அவனை நினைப்பதே பக்தி."[6] "மனசு என்பதே நின்று போய் ஆத்ம ஸ்யோதிஸ் அப்படியே பளீரென்று அடிப்ப தற்குமுன்னதாக அந்த மனசிலிருந்து பாப அழுக்குப் போக

வேண்டும். இப்படி பாபத்தைப் போக்குவதே பக்தி."[7] "நீ எப்படி விட்டாயோ அப்படி ஆகட்டும் என்று சரணாகதி செய்வதுதான் பக்தி."[8]

"ஒரு பாத்திரத்திலிருந்து இன்னொரு பாத்திரத்தில் தைலதாரை ஒழுகுவது போல ஒரே பொருள்மீது மனம் ஓடுதற்குத் தியானம் என்று பெயர். அதே மனம் அப்படி பகவான் மீது ஓடினால் அதுவே பக்தி" என்பர் இராமாநுசர்.

"தண்ணீருள் மூழ்கியவன் வெளியே வந்து மூச்சுவிடத் தவிப்பது போல இறைவனைப் பார்க்கத் துடிப்பது பக்தி" என்பர் இராமகிருஷ்ண பரமஹம்சர்.

"விவேக வைராக்ய மும்முட்சுத்துவத்தோடு விசாரம் செய்து ஷட்சம்பத்தோடு கிட்டும் ஆத்மஞானமே பக்தி" என்று உரைப்பர் ஸ்ரீமத்சங்கரர்.

"ஸ்ரீஹரியின்பால் எழும் ஆழ்ந்த அன்பே பக்தி" என்று கூறுவர் மத்வர்.

"பூஜையிலும் அதைப்போன்ற கொண்டாட்டங்களிலும் பிரியப்படுதலே பக்தி" என்று கூறுவர் வியாசர்.[9]

"இறைவனுடைய சகுணவடிவைத் தியானிப்பது பக்தி"[10] என்பது சுவாமி விவேகானந்தரின் கூற்றாகும்.

பக்தியை இன்னொரு வகையில் சொல்வதானால் 'அன்பு' என்றும் சொல்லலாம். "அன்பு செலுத்துவது என்பது இன்னொரு வகையில் சொல்லப்போனால் மனஈடுபாடே."[11] "வேலையில் நாம் காட்டும் மனஈடுபாட்டுக்குத் தான்—உள்ளக்கலப்புக்குத்தான் பக்தி என்று பெயர்."[12]

நெஞ்சக்கனிவோ அல்லது வெறும் உணர்ச்சியோ பக்தி ஆகிவிடுவதில்லை. வினைகள் விட்டு நீங்குவதற்கு வேண்டிய சிவத்தொண்டும், மலத்தைச் சுட்டெரிக்கவல்ல சிவஞானமும் இரண்டிறக்கைகளாகக் கொண்டு ஆன்மாவைச் சிவனை நோக்கி மேலேற்றுவதே பக்தி"[13] ஆகும்.

"இறைவன்மேல் பக்தி செலுத்துவதற்குக் காரணம் அவர்கள் அப் பரம்பொருள்மேல் கொண்ட பாசமே யாகும்."[14] "காதலானது தரம்குறைகையில் காமமாகிறது. தரம் உயர்கையில் பக்தியாகிறது."[15]

"பக்தி என்றால் 'தொடர்பு' என்று பொருள். சம்சாரம் என்கிற பொழுது உலகத்துடன் நமக்குள்ள தொடர்பைக் குறிக்கும். பக்தி என்கிறபொழுது கடவுளுடன் நமக்குள்ள தொடர்பைக் குறிக்கும்."[16] "பக்தி என்பது கொடுப்பதைத் தவிரக் கேட்பதல்ல. நிபந்தனையற்ற சரணாகதியே பக்தி என்றழைக்கப்படுகிறது."[17] பக்தி என்பது தொடர்பாக நடைபெறவேண்டிய ஒன்று. கடவுளின் உருவத்தை மனத்தில் இருத்தித் தியானத்தில் ஈடுபடுவதே பக்தி"[18] யாகும்.

"பக்தி என்பது இறைவனின் வழிகாட்டுதலை வேண்டிடும் முடிவற்ற ஒரு இயக்கம் ஆகும்."[19] "பக்தியே கடவுளின் அருளைப்பெற வழி. நான் என்கிற எண்ணம் அழியும் போதுதான் பக்தி முழுமை பெறுகிறது."[20] "ஐம்புலன் எனும் குதிரைகளைப் பூட்டி அவைதமைக் கட்டுக்குள் உட்படுத்தி அதில் வாழ்க்கைப்பயணம் செய்யும் உயிரினை (ஆத்மாவை) சரியான வழியில் ஆனந்த நிலைக்கு அழைத்துச் செல்லும் கடிவாளத்தைப் போன்ற கட்டுப்பாட்டுக் கவசமே பக்தி."[21]

ஆன்மாவுக்கு உறுதியைக் கொடுக்கக்கூடிய நிலையான பொருளாக இருப்பது பக்தி.[22] அது தனிமனிதனுக்கும், ஒர் கூட்டத்திற்கும பொருந்துவதாகும்.[23]

இவ்வாறே பக்தியைப்பற்றி மேலும் பல்வேறு அறிஞர்கள் பல்வேறு கருத்துக்களை வெளியிட்டுள்ளனர்.[24]

இவற்றால், குற்றமில்லாத அன்பு, இனிமையான பேச்சு பகைமை பாராட்டாத மனம் மூன்றையும் உள்ளடக்கி, அன்பின் முதிர்ச்சியாக விளங்குவதும், அறிவினால் காண

முடியாத பரம்பொருளை கண்டு அறியச்செய்வதும் பக்தி யாகும் என்று உறுதிப்படுத்தலாம்.

### 1.3.0. பக்தி வகைகள்

இறைவனுக்கும், மனிதனுக்கும் இடையே ஏற்படும் பிணைப்பே, அன்பின் இணைப்பே பக்தியாகும். இப் பக்தி அடியாரின் மனத்தின் திறத்திற்கேற்ப பல்வேறு நிலை கொள்கிறது. ஈண்டு, வைணவர் கூறும் ஐந்துவித பக்தி வகைகள், நாரதர் கூறும் பதினோருவித பக்தி வகைகள், பாகவதம் கூறும் எண்வகை பக்திநெறிகள், பகவத்கீதை குறிப்பிடும் நான்குவித பக்திகள், தாமஸ, ராஜஸ, சாத்வீக பக்திவகைகள், வைதிபக்தி, ராகபக்தி என்னும் இருவகைப் பட்ட பக்திகள் ஆகியன விளக்கப்பெறுகின்றன.

### 1.3.1. வைணவர் கூறும் ஐந்துவித பக்திவகைகள்

வைணவர்கள் ஐவகைப்பட்ட பக்திநிலைகளில் திருமாலிடம் அன்பு செலுத்துவர். அவையாவன;

1. தாச பக்தி (தாஸ்யசக்தி பக்தி)
2. தோழ பக்தி (ஸக்யாசக்தி பக்தி)
3. தாய்மை பக்தி (வாத்ஸல்யாசக்தி பக்தி)
4. தந்தை பக்தி (சாந்த பக்தி)
5. நாயகி பக்தி (மதுர பக்தி)

#### தாச பக்தி (தாஸ்யசக்தி பக்தி)

பகவானைக் காண்பதோடு நில்லாது, அவரோடு உறவு கொண்டாடி, அவரை ஆண்டானாகவும் தம்மை அடிமை யாகவும் கருதி, அவருக்கு எப்போதும் தொண்டு செய்வது தாஸ்யசக்தி[16] பக்தியாகும்.

சான்று: அனுமன்.

இராமபிரானை ஆண்டானாகவும், தன்னை அடிமையாகவும் கருதி அனுமன் செய்த பக்தி இப் பக்திவகைக்குச் சான்றாக அமைகின்றது.

**தோழ பக்தி (ஸக்யாசக்தி பக்தி)**

அடிமை, பகவானை நெருங்க, நெருங்க தனது அன்பின் மிகுதியால் தன்னைத் தோழனாகக் கருதியும் அன்பு செய்கிறான். இவ்வாறு ஆண்டவனிடம் தோழனாக இருந்து பக்தி செலுத்துதல் தோழபக்தி அல்லது ஸக்யாசக்தி பக்தியாகும். கண்ணனைத் தோழனாகக் கருதி அருச்சுனன் செய்த பக்தி இதற்குச் சான்றாகும். குசேலர், சுந்தரர் முதலியோரை இப் பக்திவகைக்கு மேலும் சான்றாகக் கொள்ளலாம்.

**தாய்மைபக்தி (வாத்ஸல்யாசக்தி பக்தி)**

பக்தனுக்கு அன்பு முற்ற முற்றத் தன்னைத் தாயாகவும் இறைவனைத் தனது குழந்தையாகவும் கருதும் நிலை ஏற்படுகிறது. இந்நிலையால் பக்தன் இறைவன் தன்னைக் காப்பாற்றுகிறான் என்னும் நினைவின்றி, தான் அவனைக் காக்க வேண்டுமென்று நினைக்கின்றான். இவ்வகை பக்தி வாத்ஸல்யாசக்தி பக்தி அல்லது தாய்மைநிலையில் அன்பு செய்தல் எனப்படும். கண்ணனைத் தன் குழந்தையாகவும், தான் கண்ணனின் தாயாகவும் இருந்து யசோதைபிராட்டி செய்த பக்தி இதற்குச் சான்றாகும். கண்ணப்பநாயனார், பெரியாழ்வார் முதலானோரை இவ்வகை பக்திக்கு மேலும் சான்று கூறலாம்.

**தந்தை பக்தி (சாந்தபக்தி)**

உயிர்க்கு என்றும் தந்தையாகும் பகவான் மீதுள்ள பிரேமையினால் உலகப் பொருள்களின் மீதுள்ள ஆசைகளை அடக்கி மனதை எப்போதும் சலனமற்ற அமைதியான

நிலையில் வைத்துக்கொண்டு பகவானையே தியானித்து இறையருள் பெறுதல் சாந்தபக்தியாகும்.

சான்று—ரிஷிகள்.

**மதுரபக்தி**

பகவானைத் தன் நாயகனாகக் கருதிச் செய்யும் அன்பு மதுரபக்தியாகும். திருவரங்கநாதனைத் தன் காதலனாகவும், தன்னை அவனுடைய காதலியாகவும் நினைந்து ஆண்டாள் செய்த பக்தி மதுர பக்திக்குச் சிறந்ததொரு சான்றாகும். நம்மாழ்வாரிடத்தும் இப்பக்தி மிளிர்வதைக் காணலாம்.

### 1.3.2. நாரதர் கூறும் பதினோருவிதமான பக்திவகைகள்

நாரத பக்திச் சூத்திரம்[96] பதினோருவிதமான பக்தி வகைகளைக் குறிப்பிடுகின்றது. அவை வருமாறு :

**குணமகாத்மியாசக்தி பக்தி**

இறைவனுடைய திருக்கல்யாண குணங்களில் ஈடுபடுதல்.

சான்று—நாரதர்.

**ரூபாசக்தி பக்தி**

எம்பெருமானுடைய திவ்வியமங்கள விக்கிரகத்தி ஈடுபடுதல்.

சான்று—பிருந்தாவனத்துப் பெண்கள்.

**ஸ்மரணாசக்தி பக்தி**

பகவத்ஸ்மரணத்தில் ஈடுபடுதல்.

சான்று—பிரகலாதன்.

**பூஜாசக்தி பக்தி**

பகவத் பூசையில் ஈடுபடுதல்.

சான்று—அம்பரீடன்.

**தாஸ்யாசக்தி பக்தி**

இறைவனுக்கு அடிமையாக இருந்து சேவை செய்தல்.

சான்று—அனுமன்.

சைவத்தில் இவ்வகைப்பட்ட பக்தி 'தாசமார்க்கம்' என்று வழங்கப்படுகிறது.

**வாத்ஸல்யாசக்தி பக்தி**

இறைவனைக் குழந்தையாகக் கருதி பக்தி செய்தல் வாத்ஸல்யாசக்தி பக்தியாகும்.

சான்று—தேவகி, கௌசல்யை.

**சக்யாசக்தி பக்தி**

இறைவனைத் தோழனாகக் கருதி பக்தி செய்தல் சக்யாசக்தி பக்தியாகும்.

சான்று—அர்ச்சுனன், சுந்தரர்.

சைவத்தில் இவ்வகை பக்தி 'சகமார்க்கம்' என வழங்கப்படுகிறது.

**காந்தாசக்தி பக்தி**

தம்மைப் (பெண்ணாகவும்) தலைவியாகவும், இறைவனைத் தலைவனாகவும் கருதி பக்தி செய்தல் காந்தாசக்தி பக்தியாகும்.

சான்று—நம்மாழ்வார் முதலியோர்.

**ஆத்மநிவேதனாசக்தி பக்தி**

முழுமையாகத் தன்னை இறைவனாகிய எம்பெருமானுக்கு அர்ப்பணித்தல் ஆத்மநிவேதனாசக்தி பக்தியாகும். பிரபத்தி (அ) சரணாகதி என்றும் இது வழங்கப்படும்.

சான்று—விபீடணன், பலிச் சக்ரவர்த்தி.

**தன்மயதாசக்தி பக்தி**

தன்மயனாக—பகவான்மயனாகப் பித்தனைப் போலிருத்தல் தன்மயதாசக்தி பக்தியாகும். சனத்குமாரர்

யாக்ஞவல்கியர் முதலானோரை இப்பக்திக்குச் சான்றாகக் கூறலாம்.

**பரமவிரஹாசக்தி பக்தி**

பகவானை விட்டுப் பிரிந்திருக்கும் வேதனையில் ஈடுபடுதல் பரமவிரஹாசக்தி பக்தியாகும்.

சான்று—கோபியர், இராதை.

இப் பதினோருவித பக்தி வகைகளுள் ஒவ்வொருவரிடமும் ஒரு வகை மட்டும்தான் இருக்கும் என்பதில்லை. ஒருவகை மேலோங்கி நிற்கும்போது மற்ற வகைகள் சிறிதாவது உடன் காணப்படும்.

### 1.3.3. பாகவதம் கூறும் எண்வகை பக்திநெறிகள்

எண்வகைப்பட்ட பக்திநெறிகளைப் பாகவதம் கூறிச் செல்கிறது.[31]

அவை வருமாறு :

1. பக்தர்களிடம் அன்பு செலுத்துதல் (மத்பக்த ஜன வாத்சல்யம்)
2. பூசை நெறிகளை ஏற்றுக்கொள்ளல் (பூஜாயாம்ச் சானு மோதனம்)
3. கதாகாலட்சேபங்களைக் கேட்பதில் நாட்டம் (மத்கதா ஸ்ரவணே பக்தி)
4. குரல், பார்வை முதலானவற்றின் வெளியீடு—குரல் தழுதழுத்தல், ஆனந்த கண்ணீர் பெருகுதல் முதலியன. (ஸ்வர நேத்ராங்க விக்கிரியா)
5. தானே பூசை செய்தல் (ஸ்வயமாராதநே யத்நஹ:)
6. செருக்கற்றிருத்தல்—டம்பமின்மை (மமார்த்தே டம்ப வர்ஜனம்)

7. சதா இறைவனை நினைத்துக் கொண்டே இருத்தல் (மமா நுஸ் மரணம் நித்யம்)

8. கைம்மாறு கருதாத வழிபாடு (யச்சமாம் நோபஜீவதி)

## 1.3.4. பகவத்கீதை குறிப்பிடும் நான்குவித பக்திகள்

பகவத்கீதை பக்தியோகத்தைப் பற்றிக் கூறுகிறது. பக்தி செய்யக்கூடிய முறையில் வேறுபாடு கொண்டு இந்நூல் நான்குவித பக்தி நிலைகளைக் குறிப்பிடுகிறது.[38]

அவை வருமாறு :

1. ஆர்த்தித்துவம்
2. ஜிஞ்ஞாசத்துவம்
3. அர்த்தார்த்தித்துவம்
4. ஞானத்துவம்

### ஆர்த்தித்துவம்

துன்பம் வந்தபோது அதனை நீக்குவதற்காகப் பகவானை அன்போடு வேண்டித் துன்பம் ஒழிய பக்தி செய்வது ஆர்த்தித்துவமாகும். இவ்வாறு பக்தி செய்து துன்பம் ஒழியப் பெறுவோர் ஆர்த்தராவர்.

சான்று—திரௌபதையின் மானம் காத்த நிகழ்ச்சி.

### ஜிஞ்ஞாசத்துவம்

மோட்சத்தில் இச்சையுற்றவராகி, அந்த இச்சையை பகவானே நிறைவேற்றுவார் என்று அறிந்து அதன் பொருட்டு அவரைப் பிரார்த்தித்து வழிபடுவது ஜிஞ்ஞாசத்துவமாகும். மோட்சத்தில் இச்சையுற்று பக்திசெய்யும் இவர்கள் ஜிஞ்ஞாசுக்கள் எனப்படுவர்.

சான்று—உத்தவர்.

### அர்த்தார்த்தித்துவம்

தமது எளிமைத்தனம் நீங்கிப் பெருஞ்செல்வம் பெறல் வேண்டும் என்னும் ஆசையோடு பகவானை வணங்குதல் அர்த்தார்த்தித்துவமாகும். செல்வம் வேண்டி பக்தி செய்யும் இவர்கள் அர்த்தார்த்திகள் என்றழைக்கப்படுவர்.

சான்று—துருவர்.

### ஞானத்துவம்

மெய்ஞ்ஞானம் பெற்று யாதொன்றையும் வேண்டாது, உள்ளத்து இயல்பாகவே பொங்கும் பரிவினால் இறைவனை வணங்குவோர் ஞானிகளாவர். சான்று—பிரகலாதர்.

மேற்கூறிய நான்குவித பக்தியினுள் முதல் மூன்றும் ஒரு நோக்கத்தினைக் கொண்டு மேற்கொள்ளப்பெறுகின்றன. ஆனால் நான்காவதான ஞானத்துவமோ பக்திக்காக மட்டுமே பக்தி செய்யப்படும் சிறப்பிற்குரியது. ஞானிகள் செய்யும் பக்தியே அனைத்துக்கும் மேலானது என்றும், ஞானியை தமக்கு உயிராக மதிப்பதாகவும் பகவான் கூறுகிறார்.[10]

### 1.3.5. தாமஸ, ராஜஸ, சாத்விக—பக்திகள்

பக்தி அது செய்யப்படும் நோக்கங்களின் அடிப்படையிலும் வகை பிரிக்கப்படுகிறது.

சிலர் கடவுளிடம் பக்தி செலுத்தி, அவருடைய அருளைப் பெற்று குழப்பத்தை ஏற்படுத்தவும், மற்றவர்களை அழிக்கவும் அதைப் பயன்படுத்துவார்கள். இத்தகையோரது பக்தி தாமஸபக்தியாகும். இதற்குச் சான்று இராவணன் ஆவான்.

சிலர் தங்களுக்கு நன்மை ஏற்படவேண்டும்; அருள் கிடைக்கவேண்டும் என்ற நோக்கில் பக்தி செய்வர். இது ராஜஸபக்தியாகும்.

எந்தப் பலனையும் எதிர்பார்க்காமல், பிறப்பிலிருந்து விடுதலைவேண்டும் என்பதற்காகச் செய்யும் பக்தி சாத்விக பக்தியாகும்.[30]

### 1.3.6. வைதிபக்தி, ராகபக்தி

வைதிபக்தி, ராகபக்தி என்ற இரு நிலைகள் பக்தியிலுண்டு.

"பக்தி நூல்களிற் கூறியுள்ள விதிகளைப் பின்பற்றுவதினால் பகவான்மீது அன்பு உண்டாக வழி ஏற்படுகிறது. மனதிலுள்ள மாசு (மலம்) சற்றே அவ்விதக் கிரியைகளினால் குறைந்துவருகிறது. அக் காரணத்தால் பிரீதியும் வெளித் தோன்ற ஆரம்பிக்கிறது. இவ் விதிகளை ஒழுங்காக நாடோறும் பின்பற்றி வருபவனிடத்து உண்டாகும் பக்தி வைதிபக்தி அல்லது ஆரம்பபக்தி எனப்படும். அபரபக்தி என்பதும் இதுவே.[31]

இம் முறைப்படி, இறைவன்மீது அன்பு செலுத்திவருவதனால், நாளடைவில் "அவனைக் காணவேண்டும்" என்ற ஆசை மனதில் எழுகிறது. அவனைக் காணாத வாழ்வு கசந்து, வெறுப்படையச் செய்கிறது. "உணவு இல்லாது பசியால் மக்கள் துடிப்பதுபோலவும், பாலைவனத்தில் நடந்து செல்வோர் தாகத்தால் தவிப்பதுபோலவும், நீரைப் பிரிந்த மீன் தத்தளிப்பது போலவும் இவர்கள் பகவானை அடைவதற்காகப் பரிதவிப்பார்கள். இத்தகைய நிலை ராகபக்தியாகும். பரபக்தி என்றும் இப்பக்தி வழங்கப் பெறுகிறது.[32]

இவ்வாறு இவ்வியலில் பக்தி, பக்தி—சொல், பொருள் விளக்கம், பக்திவகைகள் ஆகியன விளக்கப்பெறுகின்றன.

## குறிப்பெண் விளக்கம்

1. கழகப் புலவர்குழுவினர் (தொ. ஆ.), கழகத் தமிழ் அகராதி, மூன்றாம் பதிப்பு, (சென்னை, 1974), ப. 641.

2. ப. அருணாசலம், பக்தி இலக்கியம், முதற் பதிப்பு, (சென்னை, 1973) ப. 129.

3. மேற்படி ப. 129-130.

4. அரங்கசீனிவாசன், வைணவ தத்துவ ஞான அடிப் படைகள், முதற் பதிப்பு, (திருச்சி, 1984), ப. 150.

5. திருஅருள்மொழி, ஆறாம் பதிப்பு, சென்னை, ப. 36, 37.

6. ரா. கணபதி, (தொ.ஆ.), தெய்வத்தின் குரல் (முதற் பகுதி), இரண்டாம் பதிப்பு, (சென்னை, 1977), ப. 514.

7. மேற்படி ப. 516.

8. மேற்படி ப. 519.

9. ஸ்வாமி, ஸ்ரீ நாரத பக்தி சூத்திரம் விளக்கவுரை, முதற் பதிப்பு, (சென்னை, 1984), ப. 38.

10. அ. லெ. நடராஜன், (தொ. மொ.), சுவாமி விவேகானந்தரின் அருள்மொழிகள் ஆயிரம், முதற் பதிப்பு, (சென்னை, 1978), ப. 103.

11. ஆச்சாரிய வினோபாபாவே, கீதைப் பேருரைகள், மூன்றாம் பதிப்பு, (மதுரை, 1982), ப. 105.

12. ஏ. கிருஷ்ணமூர்த்தி, இந்துமதத்தின் இரகசியங்கள், முதற் பதிப்பு, (கல்குறிச்சி, 1970), ப. 114.

13. ப. அருணாசலம், பக்தி இலக்கியம், ப. 132.

14. ரா. இராதாகிருஷ்ணன், ''பாசமே பக்தி' ஸப்தகிரி, (திருப்பதி, டிசம்பர் 1981), ப. 31.

15. மேற்படி ப. 32.

16. ஸ்வாமி, ஸ்ரீ நாரத பக்தி சூத்திரம் விளக்கவுரை, ப. 8.

17. எஸ். பஞ்சாபகேச சாஸ்திரிகள், 'பக்திக்கு ஒரு பிரகலாதன்', தெய்வ வழிச் சிந்தனைகள், (சென்னை, 1978) ப. 161.

18. எஸ். பஞ்சாபகேச சாஸ்திரிகள், 'பக்தர்களின் மனோபாவம்,' தெய்வவழிச் சிந்தனைகள், (சென்னை, 1978), ப. 171.

19. ஸ்ரீகீரன், 'அனந்தாழ்வாரின் உதாரணம்', தெய்வ வழிச் சிந்தனைகள், ப. 73.

20. டி. எம். பி. மகாதேவன், 'ஆதி சங்கரரும் அத்துவைதமும்', தெய்வவழிச் சிந்தனைகள், ப. 181.

21. அ. மணி, ஆனந்தம், முதற் பதிப்பு, எஸ். எஸ். எஸ். பப்ளிகேஷன். 1983, ப. 11.

22. மாருதிதாசன், இந்து சமயக் கருத்துக்கள், முதற் பதிப்பு, (சென்னை, 1981), ப. 102.

23. மேற்படி ப. 103.

24. மனத்தின் தூய்மையாலும், அகந்தையற்ற சமர்ப் பண பாவத்தாலும் மட்டுமே அமையும் ஒரு அற்புத சக்தியே பக்தி.

—சி. வி. சிவராமகிருஷ்ணசர்மா, பக்தி—பிரபத்தி, முதற் பதிப்பு (சென்னை, 1983), ப. 23.

அவன் அருளாலும் கருணையாலும் பிறந்து வாழ்கிற உயிர் அவன் அன்பையே துணையாகக் கொண்டு அவன் பாதம் அடையவேண்டும். இந்த அன்பு முறைக்கே பக்தி என்று பெயர்.

—தி. சேஷாத்திரி, ஹிந்துமதம் (ஓர் அறிமுகம்), இரண்டாம் பதிப்பு, (மதுரை, 1975), ப. 55-56.

மனம் தூய்மை அடைந்தால்தான் தியானம் கைகூடும். தங்கம் சுடச்சுட ஒளிர்வது போல், இடையறாத முயற்சியினால் நம் மனத்தைப் பக்தி என்னும் நெருப்பில் சுட்டு எடுக்கவேண்டும். —எஸ். நம்பி, 'வாயினால் பாடி மனத்தினால் சிந்தித்து' ஸப்தகிரி, (திருப்பதி, ஜூலை 1985), ப. 39.

25. மாருதிதாசன், இந்து சமயக் கருத்துக்கள், ப. 97.

26. Swami Chinmayananda, LOVE-DIVINE NARADA BHAKTI SUTRA, (Uttarkasi, 1968), Sutra 82.

27. மாருதிதாசன், இந்து சமயக் கருத்துகள், ப. 99.

28. சுவாமி சித்பவானந்தர் (த.ஆ.), ஸ்ரீமத் பகவத் கீதை, ஆறாம் பதிப்பு, (திருப்பராய்த்துறை, 1966), ப. 428-429.

29. திருஅருள்மொழி, ப. 17.

30. டி. எஸ். பாலகிருஷ்ணசாஸ்திரிகள், 'ஆஞ்சநேயரின் சாத்விகபக்தி' தெய்வவழிச் சிந்தனைகள், ப. 167.

31. திருஅருள்மொழி, ப. 14.

32. மேற்படி ப. 15.



## இயல் இரண்டு

# குலசேகரர் வாழ்வும் வரலாறும்

### 2.0. குலசேகரர் வாழ்வும் வரலாறும்

அண்டகோடிகளை ஆட்டுவிக்கும் பரம்பொருளை மனித அறிவால் காணமுயன்ற உச்சக்கட்ட நிலையே பக்தி இயக்க நிலையாகும். அந்நிலையில் மக்கள் தங்கள் கலைகளையும் செல்வங்களையும் சமயப் பணிக்கு அர்ப்பணம் செய்தனர். தமிழ்ப் புலவர்கள் பரம்பொருளை அறிவதற்கும் அறிந்து அனுகுவதற்கும் வழியாகப் பல பக்திச்சுவைப் பாடல்களைப் பாடினர். அவர்கள் சமயப்பிரிவு அடிப்படையில் நாயன்மார்கள் என்றும், ஆழ்வார்கள் என்றும் வழங்கப்பட்டனர். வைணவப் புலவர்களாகிய ஆழ்வார்கள் பன்னிருவராவர். அவர்களில் முதல் மூவர் முதலாழ்வார்களென்று குறிக்கப்படுகின்றனர். அரசராய் வைணவச் சமயத்தொண்டு செய்தும், புலவராய்த் திகழ்ந்தும் விளங்கியவர் இருவர். அவருள் ஒருவர் குலசேகராழ்வார். அன்னாரின் பக்திப்போக்கை அறிவதற்கு ஆதாரமாய் நிற்கும் வரலாற்றுச் சுருக்கம் ஈண்டு ஓரளவிற்குக் கொடுக்கப்படுகிறது. மேலும் இவ்வியல் குலசேகரரின் அரசவாழ்வு, இறைவாழ்வு என்ற இரு வேறுவிதமான நோக்குகளில் அவர்தம் வரலாற்றினை ஆய்ந்து செல்லுகிறது.

## 2.1.0. குலசேகரரின் அரச வாழ்வு

### 2.1.1. பிறப்பு

பிள்ளைப்பேறு இன்றி வருந்திக் கொண்டிருந்த கோழிக்கோடு அரசன் திருவிரதனுடைய மகனாகத் திருமாலின் திருவருளால், ஸ்ரீ கௌஸ்துபரத்தினத்தின் அம்சமாய், கலியுகம் பிறந்து, இருபத்தேழு ஆண்டுகள் கழிந்த பின்பு இருபத்தெட்டாவதான 'பராபவ' ஆண்டில் மாசித்திங்களில் புனர்வசு நட்சத்திரத்தில் திருவஞ்சிக்களம் என்னும் திருத்தலத்தில் குலசேகரர் அவதரித்தார்.[1]

இவர் பிறந்த 'பதி' குறித்து பல்வேறு கருத்துக்கள் நிலவுகின்றன. கேரள நாட்டுக் கொல்லி மாநகரில் மாசித் திங்கள் புனர்பூச நட்சத்திரத்தில் குலசேகரர் அவதரித்தார் என்பது பின் பழகிய பெருமாள்சீயரின் குருபரம்பரைக் கருத்து.

கருடவாகன பண்டிதரின் திவ்யசூரிசரிதம் 'கோழிக் கோடு' என்று உரைக்கும். வேதாந்ததேசிகரும் (தேசிகப் பிரபந்தம்-374) மணவாள மாமுனிகளும் (உபதேசரத்தின மாலை-31) வஞ்சிக்களம் என்று உரைப்பர்.[2]

குலசேகரரது தாய் நாதநாயகி என்றும், அவரது குலம் சேர அரசவம்சம் என்றும் ஆழ்வார்கள் அமுதமொழி கூறுகிறது.[3] குலசேகரர் வீரம் செறிந்த அரசமரபினர் என்பது "கொல்லிக்காவலன் கூடல்நாயகன் கோழிக்கோன் குலசேகரன்"[4] என்னும் தொடரால் தெளிவாகிறது.

### 2.1.2. குலசேகரன்—பெயர்க்காரணம்

குலசேகரர் கௌஸ்துபரத்தினத்தின் அம்சமாய்த் தோன்றியவர். இவரது இயற்பெயர் குலசேகரர் ஆகும். தன் குலத்துக்கே சிரோபூஷணம் போலச் சிறப்புத் தந்து யாவராலும் கொண்டாடத் தக்கவனெனக்கொண்டு 'குல சேகரன்' எனப் பெயரிடப்பட்டதாக ஆழ்வார்கள் சரித்திரம் கூறுகிறது.[5]

### 2.1.3. சிறப்புப்பெயர்கள்

குலசேகரருக்கு வழங்கப்பட்ட சிறப்புப்பெயர்கள், அவற்றிற்கான காரணங்கள் ஆகியன ஈண்டு விளக்கம் பெறுகின்றன.

குலசேகரர், 'குலசேகரப்பெருமாள்' என்று சிறப்பித்து அழைக்கப்படுகிறார். பெரியவாச்சான்பிள்ளை குலசேகரரைப் 'பெருமாள்' என்றும், 'ஸ்ரீ குலசேகரப்பெருமாள்' என்றும் அழைக்கின்றார்.[6] மேலும் குலசேகரர் தன்னை கொல்லிக்காவலன், கூடல்நாயகன், கோழிக்கோன்[7] என்று பலவாறு சிறப்பித்து அழைத்துக்கொள்வதை அவர்தம் பெருமாள் திருமொழிப் பாசுரங்களில் காணலாம்.

கேரளநாடு ஒருகாலத்தில் 'பெருமாள்' என்று அழைக்கப்பட்ட அரச பரம்பரையினரால் ஆளப்பட்டுவந்தது. அவர்கள் இருபத்தைந்துக்கும் மேற்பட்டவராவர். அவர்களில் 'குலசேகரர்' என்ற பெயருடையவர்கள் இருவர். அவருள் ஒருவர் குலசேகராழ்வார் என்று குலசேகராழ்வார் 'குலசேகரப்பெருமாள்' என வழங்கப்பட்டதற்கான காரணத்தைப் புலப்படுத்துகிறார் அறிஞர் தெ.பொ.மீ.[8] இராமபிரானிடத்து வைத்த மிகுதியான பக்தியினால் இராமனது இன்பதுன்ப உணர்ச்சிகளைத் தமதாக்கிக்கொண்டு தாமும் அனுபவித்து உருகியவர் குலசேகராழ்வார். இதற்கு அவர் வாழ்வில் நிகழ்ந்த சில தெய்வீக நிகழ்ச்சிகளே சான்றாகும். ஆதலால் பெருமாள்மீது கொண்ட தீவிர பக்தியினால், பெருமாள் இராமராகவே மாறிய நிலையினரானதால், அவர் 'பெருமாள்' என்று சிறப்பித்து அழைக்கப்பட்டிருக்கலாம்.

### 2.1.4. இளமைப்பருவம்

நாளொருமேனியும் பொழுதொருவண்ணமுமாய் வளர்பிறைச் சந்திரனாக வளர்ந்த குலசேகரர் ஆறு சாத்திரங்கள், நான்கு வேதங்கள், அரசர்க்குரிய நீதி

நூல்கள், யானை, குதிரை, தேர் முதலானவை பற்றிய நூல்கள் ஆகியவற்றைத் திறம்படக் கற்றார். அரசு முறைப்படி இளவரசு பட்டமும் பெற்றார்; சோழ பாண்டியரை வென்று கொல்லிக்காவலன், கூடல்நாயகன், கோழிக்கோன் ஆனார்.[9]

## 2.1.5. இல்லறம்

குலசேகரர் தன் மனத்திற்கினியாள் ஒருத்தியை மணந்து, த்ருடவ்ரதன், நீளாதேவி என்ற இரு மழலைச் செல்வங்களுக்குத் தந்தையானார். குலசேகரர் தன்மகன் த்ருடவ்ரதனுக்கு முடிசூட்டி மன்னனாக்கியபின் அரசுதர்மப் படி இல்லறம் துறந்ததாகவும்,[10] இளை (அ) நீளாதேவி என்ற தனது மகளை திருமாலுக்கு மணம் செய்து கொடுத்ததாகவும் செய்திகளுள.[11]

## 2.1.6. காலம்

ஒன்பதாம் நூற்றாண்டில் எழுதப்பெற்ற ஒருகல்வெட்டு "தேட்டருந் திறல் தேனினை' என வரும்குலசேகரரது திருமொழியைத் திருக்கோயிலில் பாடுவதற்காகக் கட்டளை ஏற்படுத்துகின்றது. இது நடப்பதற்குச் சிலகாலம் முன்ன தாகக் குலசேகரர் வாழ்ந்திருக்க வேண்டும். ஆகவே குலசேகரரை எட்டாம் நூற்றாண்டின் ஈற்றில் வாழ்ந்த வராகக் கொள்ளலாம் என்பர் அறிஞர் தெ. பொ. மீ. அவர்கள்.[12] மேலும் பேராசிரியர் மு . இராகவையங்கார், குலசேகராழ்வார், திருமங்கையாழ்வார், தொண்டரடிப் பொடியாழ்வார் ஆகிய மூவரும் சமகாலத்தில் வாழ்ந்தவர் கள் என்று கருதுகிறார்.[13] ஆதலால் குலசேகராழ்வார் காலம் எட்டாம் நூற்றாண்டினதாக இருக்கலாம் என்பது அவரதுகருத்து. இவற்றால் குலசேகராழ்வாரை எட்டாம் நூற்றாண்டில் வாழ்ந்தவராகக் கொள்ளலாம்.

### 2.2.0. குலசேகரரின் இறைவாழ்வு

வானாளும் செல்வமும், மண்ணரசும் வேண்டாது திருமாலின் திருவருள் ஒன்றையே வேண்டியவர் குலசேகராழ்வார். திருமாலடியார்களின் அடிப்பொடி கங்கைநீரினும் உயர்ந்த தன்மையது என்ற கொள்கையுடையவர் இவ்வாழ்வார். ஈண்டு, திருமாலே முழுமுதற் பொருள் என ஆழ்வார் உணர்தல், ஆழ்வாரின் வாழ்க்கையில் நிகழ்ந்த சில தெய்வீக நிகழ்ச்சிகள், குலசேகரர் துறவு பூணுதல், இயற்றிய நூல்கள், அவரது இறுதிக்காலம் ஆகியன விளக்கப்பெறுகின்றன.

### 2.2.1. திருமாலே முழுமுதற்பொருள்

இம்மை, மறுமை, வீடு என்னும் மும்மை இன்பங்களையும் தரவல்லவனாய் முதலும் முடிவுமற்ற முழுமுதற் கடவுள் யார்? என்ற சிந்தனையில் ஈடுபட்ட குலசேகரர் எம்பெருமானது திருவருளாலே "திருமாலே முழுமுதற் பொருள்" எனவுணர்ந்து போற்றினார்.[14] "திருமாலே முழுமுதற்பொருள்" என்று உணர்ந்த குலசேகரர் திருமாலின்[16] அவதாரமான இராமபிரானிடத்து மனத்தைச் செலுத்தி, ஆழ்ந்த பக்தியுடன் பித்தர்போல் விளங்கினார்.

### 2.2.2.0. குலசேகரரின் வாழ்க்கையில் சில தெய்வீக நிகழ்ச்சிகள்

குலசேகரரின் வாழ்க்கையில் நடந்த சில தெய்வீக, நிகழ்ச்சிகள் அவரது பக்திச் சிறப்பினையும், தெய்வீகத்தையும் நமக்கு பறைசாற்றுகின்றன. இலக்குவன், சீதையோடு இராமபிரானது காட்சி, குலசேகரர் குடப் பாம்பில் கை விட்ட நிகழ்ச்சி ஆகியன அவரது வாழ்வில் நிகழ்ந்த தெய்வீக நிகழ்ச்சிகளாகும்.

## 2.2.2.1. இலக்குவன், சீதையோடு இராமபெருமானது காட்சி

திருமாலின் விபவ அவதாரங்களில் ராமாவதார கிருஷ்ணாவதாரங்களிடத்திலும், அர்ச்சாவதாரத்தில் திருவரங்கம், திருவேங்கடம், திருவித்துவக்கோடு, திருக்கண்ணபுரம், தில்லைத் திருச்சித்ரக்கூடம் ஆகிய திவ்விய தேசத்து எம்பெருமான்களிடத்திலும் மிகுந்த பக்திப் பெருங்காதல் கொண்டு விளங்கினார் குலசேகராழ்வார். இராமாயணப் பிரசங்கம் கேட்பதையே தம்முடைய பொழுதுபோக்காகக் கொண்டும், திருமாலின் அடியவர்களுக்குத் தொண்டுகள் பல புரிந்தும், தம் திருமாளிகையில் எழுந்தருளியுள்ள இராமபிரானுக்கு உற்சவம் முதலான வழிபாடுகள் நிகழ்த்தியும்[15] வாழ்ந்துவந்த ஆழ்வாருக்கு இராமபிரானது திவ்விய தரிசனம் கிடைத்தது பொருத்தமானதே.

இராமாயணப்பிரசங்கர் இராவணன் சீதையை சென்று எடுத்த நிகழ்ச்சியினை விளக்கிக் கூறிக்கொண்டிருக்க, பிரசங்கத்தைக் கேட்டுக்கொண்டிருந்த குலசேகரர் தனை மறந்து, அந்நிகழ்ச்சியை அப்பொழுது நடப்பதாக எண்ணி, மிகவும் கோபமுற்று, "நான் இப்போதே கடல் கடந்து இலங்கை சென்று இராவணனை அழித்து, அன்னையை மீட்பேன்" என்று உறுதி கூறி, இலங்கை நோக்கிப் புறப்பட்டார். கடலை நீந்திக் கடக்கும்பொருட்டு கழுத்தளவு நீரில் இறங்கினார். ஆழ்வாரது பக்தியின் மேன்மைக்கு மகிழ்வுற்ற இராமபிரான் சீதை, இலக்குவரோடு காட்சி தந்து, இராவணனைத் தான் அழித்து, தேவியை மீட்ட நிகழ்ச்சியைக் கூறி அவரைக் கரையேற்றி மறைந்தார்.[16] இது குலசேகராழ்வாருக்கு இலக்குவன், சீதையோடு இராமபிரான் காட்சி தந்த வரலாறாகும்.

## 2.2.2.2. குலசேகரர் குடப்பாம்பில் கை விட்ட நிகழ்ச்சி

எம்பெருமானது திவ்விய வரலாறுகளைக் கேட்பதில் மிக்க ஈடுபாடுடையவர் குலசேகராழ்வார். திருவரங்கத்

திருத்தலத்தின் பெருமையைக் கேட்டறிந்த ஆழ்வார், திருவரங்கனைக் கண்டுகளித்து, அங்கேயே தங்கிவாழ விரும்பித் திருவரங்கம் புறப்பட்டார். திருவரங்கனைக் கண்டால் குலசேகரர் மீளார் என்பதை அறிந்த அவரது அமைச்சர்கள் திருமாலடியவர்களை வரவழைத்து, குல சேகரரைப் பாகவதத்தொண்டில் ஈடுபடச்செய்தனர். ஆனால் நாளடைவில் திருமாலடியார்களின் கூட்டம் பெருகி, அரண்மனை, ஆலோசனை மண்டபம், அந்தரங்க இடம் என எங்கும் பரவியது. மன்னனிடம் செல்வாக்கும் பெருகி அவர்கள் அரசியலிலும் தலையிடும் நிலைமை ஏற் பட்டது. இதனால் திருமாலடியார்களின் செல்வாக்கைக் குறைத்து, மன்னனிடம் அவர்களுக்கு வெறுப்புண்டாக அமைச்சர்கள் பெரும்சதி செய்தனர். ஸ்ரீராமநவமி உற்ச வத்தின் போது இராமபிரானது இரத்தின ஆரத்தை எடுத்து மறைத்து வைத்து, அது களவுபோனதாகவும், அதை பாகவதர் எவரேனும் எடுத்திருப்பர் என்றும் பழி சுமத்தினர். மன்னர் குலசேகரர் அதனை நம்பாது, பெரு மாளடியார் "அது செய்யார்" என்பதை பாம்பு உள்ளிட்ட தொரு குடத்தில் கைவிட்டு உண்மையை நிரூபித்தார்.[17]

பின்னர் பொய்ம்மை நிறைந்த அரசபதவியினைத் துறந்து, திருவரங்கம் சென்று அரங்கனைக் கண்டு வணங்கி, அங்கு சிலகாலம் தங்கி, பின் திருத்தலப்பயணம் மேற் கொண்டார்.[18]

### 2.3.3. துறவு பூணுதல்

குலசேகரர் "குடப்பாம்பிற் கை விட்ட" நிகழ்ச்சிக்குப் பின் அரசினை வெறுத்து துறவு பூண்டதாக வரலாறு உண்டு. ஆயினும், அவரது துறவினைப் பற்றி வெவ்வேறு மாறுபட்ட கருத்துக்கள் நிலவிவருகின்றன. குலசேகரர் இளமையிலேயே அரசுரிமையை வெறுத்துத் திருவரங்கம்

சென்று திருக்கோயில் திருப்பணியில் ஈடுபட்டார் என்று குருபரம்பரையும், தம் திருமகனாருக்குப் பட்டம் கட்டி விட்டுத் துறவு பூண்டார் என்று திவ்விய சூரிய சரிதமும் கூறுகின்றன.[19]

## 2.2.4. இயற்றிய நூல்கள்

"பெருமாள் திருமொழி" என்னும் தமிழ்ப் பக்திப்பனுவலோடு, "முகுந்தமாலை" என்னும் வடமொழி பக்தி நூலையும் குலசேகராழ்வார் வழங்கியுள்ளார். முகுந்தமாலை குலசேகராழ்வார் பாடியதல்ல என்ற ஓர் கருத்து வைணவ உலகில் நிலவிவருகிறது.[20]

## 2.2.5. இறுதிக்காலம்

துறவு பூண்டு திருவரங்கனுக்குத் தொண்டு செய்வதில் பேரின்பம் கண்டிருந்த ஆழ்வார் எம்பெருமானது திருத்தலங் களைக் கண்டு ஆராதிக்கப் பயணமானார். திருவேங்கடம், திருஅயோத்தி, தில்லைத் திருச்சித்ரக்கூடம், திருக்கண்ண புரம், திருமாலிருஞ்சோலை, திருவித்துவக்கோடு ஆகிய திருத்தலங்களைக் கண்டு எம்பெருமானின் பல்வேறு அர்ச்சை வடிவ நிலைகளை ஆராதித்தார். இறுதியில், திருக்குருகூர்க்கு அருகிலுள்ள பிரம்மதேசம் என்னும் ஊரை அடைந்து அங்குள்ள இராசகோபாலசுவாமி ஆலயத்தில் பல ஆண்டுகள் தொண்டு செய்துகொண்டிருந்து, தனது அறுபத்தேழாவது வயதில் எம்பெருமானின் திருவடிகளை அடைந்ததாகச் செய்திகள்.[21]

# குறிப்பெண் விளக்கம்

1. வை. மு. சடகோபராமானுஜாசாரியர், வை. மு. கோபால கிருஷ்ணமாசாரியர், ஆழ்வார்கள் சரித்திரம், மூன்றாம் பதிப்பு (சென்னை, 1966), ப. 27-28.

2. ந. சுப்புரெட்டியார், 'வைணவ சமய நூல்கள்'; தெய்வத் தமிழ், முதற் பதிப்பு, (சென்னை, 1975), ப. 419.

3. தி. பாஷ்யம், ஆழ்வார்கள் அமுதமொழி, முதற் பதிப்பு, (சென்னை, 1978), ப. 80.

4. பெரு. திரு. 2: 10.

5. வை. மு. சடகோபராமானுஜாசாரியர், வை. மு. கோபால கிருஷ்ணமாசாரிய ஆழ்வார்கள் சரித்திரம். ப. 28.

6. தெ. பொ. மீனாட்சிசுந்தரனார், குலசேகரர், இரண்டாம் பதிப்பு, (மதுரை, 1978), ப. 9.

7. பெரு. திரு. 2 : 10.

8. தெ. பொ. மீனாட்சிசுந்தரனார், குலசேகரர், ப. 8-9.

9. வை. மு. சடகோபராமானுஜாசாரியர், வை. மு. கோபால கிருஷ்ணமாசாரியர், ஆழ்வார்கள் சரித்திரம் ப. 28.

10. மேற்படி ப. 28.

11. தெ. பொ. மீனாட்சிசுந்தரனார், குலசேகரர், ப. 17.

12. மேற்படி (குலசேகரர்), ப. 8.

13. மு. இராகவையங்கார், ஆழ்வார்கள் காலநிலை ப. 159.

14. வை. மு. சடகோபராமாநுஜாசாரியர், வை. மு கோபால கிருஷ்ணமாசாரியர், ஆழ்வார்கள் சரித்திர ப. 29.

15. மேற்படி ப. 29.

16. வை. மு. சடகோபராமாநுஜாசாரியர், வை. மு கோபால கிருஷ்ணமாசாரியர், ஆழ்வார்கள் சரித்திர ப. 30.

17. ஆரங்கெடப் பரனன்பர் கொள்ளாரென் றவர்களுக்கே
வாரங்கொடு குடப்பாம்பிற் கையிட்டவன் மாற்றலரை
வீரங்கெடுத்த செங்கோல் கொல்லிகாவலன்
வில்லவர்கோன்
சேரன் குலசேகரன் முடிவேந்தர் சிகாமணியே.
- பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரிய (உரை.), பெருமாள் திருமொழி, தனியன் உரை.

18. வை. மு. சடகோபராமாநுஜாசாரியர், வை. மு கோபால கிருஷ்ணமாசாரியர், ஆழ்வார்கள் சரித்திரம் ப. 32.

19. ந. சுப்புரெட்டியார், 'வைணவ சமய நூல்கள்' தெய்வத் தமிழ், ப. 419.

20. குலசேகராழ்வார், முகுந்தமாலை (காஞ்சிபுரம் 1974), உரையின் அவதாரிகை.

21. வை. மு. சடகோபராமாநுஜாசாரியர், வை. மு. கோபால கிருஷ்ணமாசாரியர், ஆழ்வார்கள் சரித்திரம். ப. 32-33.

## இயல் மூன்று

# குலசேகராழ்வார் பாசுரங்களில் பக்தி

### 3.0. பெருமாள் திருமொழியில் பக்தி

பக்தி சொல், பொருள் விளக்கம், பக்திவகைகள் ஆகியன முதல் இயலில் விளக்கப்பெற்றுள்ளன. நாரதபக்தி சூத்திரம் குறிப்பிடும் பதினோருவித பக்திவகைகளும்[1] பெருமாள் திருமொழியில் இடம்பெறுகின்றன. அவற்றுள் குறிப்பாக தாஸ்யாசக்தி பக்தி, வாத்ஸல்யாசக்தி பக்தி, மதுர பக்தி ஆகியன மிக்க செல்வாக்குடன் திகழ்கின்றன. இவற்றை இவ்வியல் கண்டு, ஆய்ந்து, தெளிவு செய்ய முயல்கிறது.

### 3.1.0. தாஸ்யாசக்திபக்தி (தொண்டன்பு)

ஈண்டு தாஸ்யாசக்தி பக்தியின் விளக்கமும், பெருமாள் திருமொழியில் தாஸ்யாசக்தி பக்தியின் பங்கும் கூறப்பட்டிருக்கின்றன.

### 3.1.1. விளக்கம்

வைணவ சமய மரபு குறிக்கும் பக்திவகைகளில் தாஸ்யாசக்தி பக்தி (தொண்டன்பு) குறிப்பிடத்தக்கது. ஆண்டவனிடத்துத் தம்மை அடிமையாகக்கொண்டு, அவனுக்கு எப்போதும் அடிமையாக இருந்து தொண்டு செய்வது தாஸ்யாசக்தி பக்தியாகும்,

### 3.1.2. பெருமாள் திருமொழியில் தாஸ்யாசக்திபக்தி

குலசேகராழ்வார் திருவேங்கடமலையில் ஏதேனுமாகப் பிறந்து, திருவேங்கடவனை விட்டு நீங்காது, அவனுக்கும் அவன் பக்தருக்கும் தொண்டு செய்து தாசனாக இருந்து வாழ விரும்புகிறார். ஆகவே, திருவேங்கட மலையில் குருகாக, மீனாக, பொன்வட்டில் பிடிப்போனாக, செண்பக மரமாக, தம்பகமாக, ஒப்புயர்வற்ற சிகரமாக, கானாறாக, நெறியாக, படியாக, இறுதியில் ஏதேனுமாகவேனும் பிறக்க ஆசைப்படுகிறார்.[9]

ஆழ்வார் உள்ளம் முதன்முதலில் தான் கோனேரி வாழும் குருகாகப் பிறந்து, அவனை—அவன் மலையை விட்டு நீங்காது வாழ ஆசைப்படுகிறது. ஆனால், குருகாய் தான் பிறந்தாலும், குருகு சிறகுடையதாகையால் அது அம்மலையை விட்டுப் பிரிந்துவிடுமோ? என்ற ஐயம் கொண்டு ,அவ்வெண்ணத்தை நீக்குகிறார்.

அடுத்து பறக்க இயலாத மீன்பிறவியைக் கொண்டு திருவேங்கடச் சுனையில் சுனையின் அழுக்கை நீக்கி, நீராடும் தொண்டருக்குத் தொண்டு செய்ய ஆசைப்படுகிறார். அந் நிலையிலும் அவர் மனம் நிறைவு அடையவில்லை. காரணம் —குளநீர் வற்றிவிடின், அதில் வாழும் மீன் இறந்துவிடும் அபாயம் இருப்பதால், அந்த அபாயமற்ற பொன்வட்டில் பிடிப்போனாகும் பேற்றினை வேண்டுகிறார்.

அதன்கண்ணும் ஒரு குறை இருப்பதை ஆழ்வார் மனம் எண்ணிப் பார்க்கிறது. அதாவது அப்பணி செய்யும்போது பொன்னின்மீது ஆசைகொண்டு அப்பொன்வட்டிலைக் களவாடக்கூடிய ஆபத்து அதிலிருப்பதை உணர்ந்த ஆழ்வார், செண்பகமரமாய் இருந்து மலர்களால் மாலவனடி அலங்கரிக்க வேண்டுகிறார்.

அமரர் உலகத்திலிருந்து கண்ணபெருமான் பாரிஜாத மரத்தினை அடிபெயர்த்து வந்து பூஉலகத்தில் நட்டதைப்

போல், செண்பகமரமானால் எவரேனும் தன்னை அடியோடு பெயர்த்துவிடும் அபாயம் இருப்பதால் அதையும் விடுத்து தம்பகமாகப் பிறக்க ஆசைப்படுகிறார்.

கோடையில் தம்பகமரம் அதிக வெப்பத்தினால் தீய்ந்து போகக்கூடுமாதலால் அதையும் விரும்பாது, பொற் குவடாகப் பிறக்க ஆசைகொள்கிறார். பின் அதிலும் நிறைவு காணாது, நீர்தந்து திருமலைக்கு வரும் பக்தர் களுக்கு பயனாகும்படிக்கு கானாறாய்ப் பாய கருத்துடைய வராகிறார்.

கானாறும் கோடையில் வறண்டுபோய் நீர் வற்றி விடுமாதலால், எப்போதும் அழியாத தன்மையதாகிய திருமலைமேல் நெறியாய்க் கிடக்க வேண்டுகிறார். பாகவ தர்களின் அடிப்பொடி தன்மீதுபட, ஆனந்திக்க விரும்பும் ஆழ்வார், திருமலைக்குச் செல்லும் நெறி பலவாகக் கூடுமாதலால் அதையும் விடுத்து, படியாய்க் கிடந்து அவன் பவளவாய் காண ஆசை கொள்கின்றார்.

பொன்பெற்றார் தனது பக்தி மிகுதியினால், எம்பெரு மானின் திருப்படிகளுக்குப் பொன்னிட்டுச் சேவை செய்வ தால் படியாய்க் கிடந்தாலும் பயனில்லை என்றுணர்ந்த ஆழ்வார், அம்மலையில் நீங்காதிருப்பதும், எம்பெருமானுக் குத் தொடர்ந்தும் தொண்டு செய்வதுமாகிய ஏதேனும் ஒரு பிறவியைக் கொடுக்கும் பொறுப்பை எம்பெருமானுக்கே விட்டுவிடுகிறார்.

இவ்வாறு அவனுக்கே, அவனது அடியவர்கட்கே விட்டு நீங்காதிருந்து எவ்வகையிலேனும் சேவை செய்ய விரும்பும் குலசேகரரின் தாஸ்யாசக்தி பக்தியினை (தொண்டன் பினை) அவர்தம் பெருமாள் திருமொழிப் பாசுரங்களில் நான்காம் திருமொழிப் பாசுரங்கள் முழுவதும் பகர் கின்றன.

## 3.2. வாத்ஸல்யாசக்தி பக்தி (தாயன்பு)

தன்னைத் தாயாகவும் இறைவனைத் தனது குழந்தையாகவும் கருதும் அன்பு வாத்ஸல்யாசக்தி பக்தியாகும்.

இவ் வாத்ஸல்யா சக்திபக்தியினை பெருமாள் திருமொழியில் தேவகி புலம்பல், கோசலை தாலாட்டு, தசரதன் புலம்பல் என்னும் மூன்று நிலைகளில் காணலாம்.

### தேவகி புலம்பல்

புல், புழு, மரம், பறவை, பாம்பு, கல் முதலியவற்றினும் உயர்ந்தது மனிதப்பிறவி. மனம் உடையவனாதலால் மனிதன் ஆனான். ஆறறிவுடையோனாக, எதையும் சிந்தித்துச் சீர் தூக்கிப் பார்க்கும் பகுத்தறிவு, மனிதனுக்கு மட்டுமே ஆண்டவனால் அளிக்கப்பட்ட ஒரு வரமாகும். அரிது அரிது மானிடராய்ப் பிறத்தல் அரிது என்று மானிடப் பிறவியின் மகத்துவத்தை ஆன்றோர் பாடியுள்ளனர். இம் மனிதப்பிறவி, முதல் பத்து மாதம் கருவறையில் தொடங்கி, மண்ணில் பிறந்து, தவழ்ந்து, எழுந்து, நடந்து, ஓடி, வளர்ந்து, இல்வாழ்வில் இணைந்து, மகிழ்ந்து, துன்பத்தில் உழன்று, இறுதியில் இறைவனைச் சரணடைந்து முடிவில் கல்லறையில் சங்கமிக்கும நிலையினதாக அமைந்துள்ளது. இந்நிலைகளில் இறைவனுககுச் சமமாக எண்ணப்படும் குழந்தைப் பருவமே மனிதவாழ்வில் உயர்ந்த பருவமாகும். இதனால்தான் இந்தக் குழந்தைப் பருவத்து மழலைச் சொற்களைச் குழலினும் யாழினும் இனியதென்றும், துன்பம் துடைப்பதென்றும் சான்றோர் கூறியுள்ளனர்.[1]

இத்தகைய மழலைச் செல்வ இன்பத்தைத் தான் அனுபவியாமல், பிள்ளைப் பெற்றும் இன்பம் பெறாத பாவியாகத் தேவகி திகழ்கிறாள். கண்ணபிரானுடைய குழந்தைத் திருவிளையாடல்களை யசோதை கண்டு களித்ததுபோல தான் களிக்கப் பெறா நிலையை எண்ணி தேவகி புலம்புகிறாள். குலசேகரர் இறைவனைத் தன்

பிள்ளையாகவும் தம்மை தாய் தேவகியாகவும் கருதிக் கொண்டு புலம்பும் பெருமாள் திருமொழி—ஏழாம் திருமொழிப் பாசுரங்களில் வாத்ஸல்யா சக்தி பக்தியினைக் காணமுடிகிறது.

"ஆலை நீள்கரும் பன்னவன் தாலோ
அம்பு யத்தடங் கண்ணினன் தாலோ
வேலை நீர்நிறத் தன்னவன் தாலோ
வேழப் போதக மன்னவன் தாலோ
ஏல வரர்குழ லென்மகன் தாலோ
என்றென் றுன்னையென் வாயிடை நிறைய
தாலொ லித்திடும் திருவினை யில்லாத்
தாய ரில்கடை யாயின தாயே"[4]

என்று தாலொலித்திடும் திருவினையில்லாத் தாய்மார்களில் கடையாயின தாயான நிலைமைக்குத் தேவகி வருந்துவ தாக குலசேகரர் பாடுவது அவரது வாத்ஸல்யாசக்தி பக்தியை நன்கு உணர்த்துகின்றது.

மை தீட்டப்பெற்றவை அச் செந்தாமரைக் கண்கள்; மேற்கட்டியிலே விளையாட்டுப் பொருள் தொங்கவிடப் பட்டிருக்கின்றது; மேகக்குட்டி போன்றதான அக் குழந்தை அவ் விளையாட்டுப் பொருளைப் பார்த்துக்கொண்டிருக் கிறது; தன் கறுத்த புறந்தாளை—திருவடிகளை முடக்கிக் கொண்டும், தன் சிறுவிரல்கள் அனைத்தும் உள்ளங்கையில் அடங்கும்படியாக, மடித்து பிடித்துக்கொண்டும், ஆனையில் கிடக்கின்றது. இத்தகைய அழகைக் கண்குளிர நான் பார்த்து அனுபவிக்கவில்லையே என்று ஏங்குகிறாள் தேவகி.

"...ஆனையிற் கிடந்த
கிடக்கை கண்டிடப் பெற்றிலே னந்தோ
தேச வாகெடு வேன்கெடு வேனே!"[5]

தான் பிள்ளை இன்பத்தை இழந்து பாவியாயிருக்கத் தன்னைக் கைப்பிடித்த காரணத்தால் வசுதேவனும் அவ்வின்பத்தை இழந்தாரே என்று தேவகி புலம்புவது,

"உந்தை யாவனென் றுரைப்பநின் செங்கேழ்
விரலி னும்கடைக் கண்ணினும் காட்ட
நந்தன் பெற்றனன் நல்வினை யில்லா
நங்கள் கோன்வசு தேவன்பெற் றிலனே"

என்ற அடிகளால் உணரலாம்.[6]

"தன் வாயமுதம் தந்தென்னைத் தளிர்விப்பிக்கிறான்"[7]

என்று சொல்லும்படியான பாக்கியத்தை இழந்தும், கண்ணனாகிய குழந்தை "வெகுளியாய் நின்றுரைக்கும் அவ்வுரையைக்"[8] கேளாதும் தான் இழந்த இன்பங்களை யசோதை பெற்றதைத் தேவகி வாயிலாகச் சொல்லி புலம்பும் குலசேகரரின் பெண்மையோடு கலந்த பெரும் நிலையை இங்குக் காணமுடிகிறது.

அமிழ்திலும் ஆற்ற லினிதேதம் மக்கள்
சிறுகை அளாவிய கூழ்[9]

என்பர் திருவள்ளுவர்.

வண்ணச் செஞ்சிறு கைவிர லனைத்தும்
வாரி வாய்க்கொண்ட வடிசிலின் மிச்சில்
உண்ணப் பெற்றிலேன் ஓ! கொடு வினையேன்
என்னை என்செய்யப் பெற்றதெம் மோயே![10]

என்று தான் மண்ணில் பிறந்ததற்காக வருந்தும் தேவகி நிலையில் புலம்பும் குலசேகரர் தம் வாத்ஸல்யாசக்தி பக்தியினை இங்கு உணரலாம்.

தாயின் கைகளில் பொருந்தியிருந்து, தன் தளிர்க்கையால் ஒரு முலைக்காம்பை நெருடிக்கொண்டும், மற்றொரு முலையானது வாயிலிருக்க, இடையிடையே தாயின் முகத்தைப் பார்த்து புன்சிரிப்புப் பூக்கும் மழலைமலர்கள் தாய்ப் பால் அருந்தும் காட்சியை இரு குழந்தைகட்குத் தந்தையான

குலசேகரர் கண்டிருக்கலாம். அவர் தேவகியாகப் புலம்பும் போது,

ஏழில்கொள் நின்திருக் கண்ணிணை நோக்கந்
தன்னை யும்இழந் தேனிழந் தேனே[11]

என்றும்,

......கடைப்பட்டேன்வெறி தேமுலை சுமந்து
தஞ்ச மேலொன்றி லேனுய்ந் திருந்தேன்
தக்க தோல்ல தாயைப்பெற் றாயே[12]

என்றும், தான் வெறிதேமுலை சுமந்து வாழ்ந்த தேவகியின் துன்பத்தை நமக்கு காட்டுகிறார்.

தான் பெறாத பாக்கியத்தை யசோதை பெற்று தான் பெறாமைக்கு வருந்தி, கண்ணனின் சிறுபிள்ளை விளையாட்டுக்களைக் காணப்பெறாத தனக்கு இனி காணும்படியான வழியுண்டு எனில் அருளுமாறு,

......என் னுள்ளமுள் குளிர
ஒன்றும் கண்டிடப் பெற்றிலே னடியேன்
காணு மாறினி யுண்டெனி லருளே[13]

என்று வேண்டுமிடத்தும் குலசேகராழ்வாரின் வாத்ஸல்யா சக்தி பக்தியினைக் காணமுடிகிறது.

### கோசலை தாலாட்டு

ராமாவதாரத்தில் கோசலை பெற்ற பேற்றைக் கருதி, அவள் அவ்விராமபிரானைத் தொட்டிலிட்டுத் தாலாட்டுக் கூறினபடி எட்டாம் திருமொழியினை அருளிச்செய்கிறார் ஆழ்வார். இவ்வனுபவம் இவருக்குத் திருக்கண்ணபுரத் தெம்பெருமான் விஷயத்திலே செல்கின்றது. இவ்வெட்டாம் திருமொழி முழுவதிலும் வாத்ஸல்யாசக்தி பக்தி மணம் கமழ்கின்றது.

"மன்னுபுகழ்க் கௌசலையின் அழகிய மணிவயிற்றிலே பிள்ளையாக அவதரித்தவனே! இராவணனின் பத்துத் தலைகளையும் சிதறச் செய்து இலங்கையை வெற்றி

கொண்டவனே! திருக்கண்ணபுரத்தில் எழுந்தருளியிருக்கின்ற என் கருமணியே! எனக்கு இனிமையான அமுதானவனே! இராகவனே! உனக்குத் தாலாட்டு"[14] என்று எம்பெருமானாகிய குழந்தைக்குப் பாடும் தாலாட்டில் இராமனின் பெருமைகளோடு குலசேகரர் தம் வாத்ஸல்யா சக்திபக்தியும் உள்ளங்கை நெல்லிக்கனியாக விளங்குவதைக் காணலாம்.

இவ்வாறே,

எண்டிசையு மாளுடையாய் இராகவனே! தாலேலோ
எங்கள்குலத் தின்னமுதே இராகவனே! தாலேலோ
ஏமருவெஞ் சிலைவலவா! இராகவனே! தாலேலோ
தாராளும் நீண்முடிஎன் தாசரதீ! தாலோலா!
சிற்றவைதன் சொற்கொண்ட சீராமா! தாலேலோ
ஆலிநகர்க் கதிபதியே அயோத்திமனே! தாலேலோ
சிலைவலவா! சேவகனே! சீராமா! தாலேலோ
இளையவர்கட் கருளுடையாய் இராகவனே தாலேலோ
ஏவரிவெஞ் சிலைவலவா இராகவனே! தாலேலோ[15]

என்று வரும் பெருமாள் திருமொழி எட்டாம் திருமொழிப் பாசுரங்கள் அனைத்திலும் கௌசல்யை இராமவதாரமாய்த் திகழும் பெருமானின் செயல்களை எண்ணி எண்ணி உருகும் நிலையில் வாத்ஸல்யாசக்தி பக்தி வெளிப்படுவதைக் காணலாம்.

இவ்வாறு கோசலை தாலாட்டுப் பாசுரங்களில், "திண்டிறலாள் தாடகைதன் உரமுருவச் சிலைவளைத்தல், பாராளும் படர்செல்வம் பரதநம்பிக்கே அருளி ஆராவன் பிளையவனோடு அருங்கானம் அடைதல், சுற்றமெல்லாம் பின்தொடரத் தொல்கானமடைதல், சிற்றவைதன் சொற் கொள்ளல், வாலியைக் கொன்று அரசு இளைய வானரத்துக்கு அளித்தல், மலையதனால் அணைகட்டி மதிளிலங்கை அழித்தல், இளையவர்கட்கு அருளுடையவனாய் இருத்தல், வளைய ஒரு சிலையதனால் மதிளிலங்கையழித்தல்"[16]

முந்திய இராமசரித வாழ்க்கை நிகழ்ச்சிகள் இடம்பெறுகின்றன.

**தசரதன் புலம்பல்**

இவ்வாறே, ஒன்பதாம் திருமொழியில் குலசேகரர் தன்னைத் தந்தை தசரதன் நிலையிலும், எம்பெருமானைப் பிள்ளை நிலையிலும் படைத்துப் புலம்புகிறார். இவ்வொன்பதாம் திருமொழியும் ஆழ்வாரின் வாத்ஸல்யா சக்தி பக்தியினைப் புலப்படுத்துவதாகவே அமைந்துள்ளது.

மக்கள் நெஞ்சங்களில் வீற்றிருக்கும் காகுத்தனை, அயோத்தி அரியணையில் அமர்த்த, அதற்கான காரியங்கள் நடந்துகொண்டிருக்கின்றன. நகரமெங்கும் மாவிலைத் தோரணக்கோலம்; அழகு செயப்பெற்றன. நாட்டின் வாரணங்கள்; அயோத்தி மக்கள் முகத்தில் மகிழ்வின் பூரணங்கள். ஆனால் கைகேயியின் அந்தப்புரத்திலோ பெரும் பூகம்பம். கைகேயி கட்டளைப்படி இராமன் காடேகுகிறான். சீதை இலக்குவன் உடன் செல்கின்றனர். தன் ஆசை நிராசையாக, தளர்ந்து, சாய்கிறான் தசரதன்.

"அரியணை ஏற இருந்த உன்னைக் காட்டிற்கு போ! என்று கூறிய கைகேயியின் வார்த்தையைக் கேட்டு, நன்றாக உன்னை இப் பூமியை ஆளும்படி செய்தேன் நன்மகனே! உன்னை நானே"[1] என்று இராமனைப் பிரிந்த தசரதன் புலம்பும் இப் புலம்பல் அவர்தம் வாத்ஸல்யாசக்தி பக்தியினை தெளிவுறுத்துகின்றது.

குலசேகரர், தந்தை தசரதன் நிலையில், இறைவனைப் பிள்ளையாக்கிச் செய்த வாத்ஸல்யாசக்தி பக்தியினை பின்வரும் பாசுர வரிகளாலும் அறியலாம்.

> ... ..நேரிழையு மிளங்கோவும் பின்பு போக
> எவ்வாறு நடந்தனையெம் மிராமாவோ!
> எம்பெருமா னென்செய் கேனே!
> கல்லணைமேல் கண்துயிலக் கற்றனையோ
> காகுத்தா! கரிய கோவே!

......இன்று
நீபோக வென்னெஞ்சம் இருபிளவாய்ப்
போகாதே நிற்கு மாறே

......கேகயர்கோன் மகளாய்ப் பெற்ற
அரும்பாவி சொற்கேட்ட வருவினையேன்
என்செய்கே னந்தோ! யானே

எம்மானை யென்மகனை யிழந்திட்ட
இழிதகையே னிருக்கின் றேனே

ஏமருதோ ளென்புதல்வன் யானின்று
செலத்தக்க வனம்தான் சேர்தல்
தூமறையீ ரிதுதகவோ? சுமந்திரனே!
வசிட்டனே! சொல்லீர் நீரே

நின்பற்றா நின்மகன்மேல் பழிவிளைத்திட்டு
என்னையும்நீள் வானில் போக்க
என்பெற்றாய்? கைகேசி! இருநிலத்தி
லினிதாக விருக்கின் றாயே

நின்னையே மகனாகப் பெறப்பெறுவேன்
ஏழ்பிறப்பும் நெடுந்தோள் வேந்தே
வானகமே மிகவிரும்பிப் போகின்றேன்
மனுகுலத்தார் தங்கள் கோவே.[28]

## 3.3.0. ரூபாசக்தி பக்தி (*அழகுக்கு ஆளான அன்பு*)

*ரூபாசக்தி பக்தி விளக்கம், எம்பெருமானின் ஐவகை நிலைகள், பெருமாள் திருமொழியில் ரூபாசக்தி பக்தி ஆகியன ஈண்டு விளக்கப்பெறுகின்றன.*

### 3.3.1. விளக்கம்

*திருமாலினது திவ்விய மங்கள விக்கிரகத்தில் ஈடுபடுதல் ரூபாசக்தி பக்தியாகும்.*

### 3.3.2. எம்பெருமானின் ஐவகை நிலைகள்

எம்பெருமான் கொண்டுள்ள திருமேனிகள் ஐந்துவகை களாகும். அவை பரம், வியூகம், விபவம், அந்தர்யாமி, அர்ச்சை ஆகியன.

**பரம்**

வைகுண்டத்தில் பரவாஸுதேவனாய் எழுந்தருளி உள்ள வடிவம் பரமாகும். இவ் வடிவநிலை என்றும் அழியாத தன்மையுடையது; வளர்தல் குறைதல் முதலிய மாறுபாடின்றி ஒரே நிலையிலிருப்பது.

தன்னுரு உறழும் பாற்கடல் நாப்பன்
மின்னவிர் சுடர்மணி ஆயிரம் விரித்த
கவைநா அருந்தலைக் காண்மின்? சேக்கைத்
துளவம் சூடிய அறிதுயிலோன்[19]

என்று இந்நிலை பரிபாடலில் பேசப்படுகிறது.

**வியூகம்**

வ்யூஹம் வாஸுதேவன்—ஸங்கர்ஷணன்—ப்ரத்யும்நன்—அநிருத்தன் என்கிற திருநாமங்களால் வழங்கும் உருவங்கள். இந்த உருவங்களுக்கும் முதற்காரணம் பரவாஸுதேவனே. இந்த நான்கினுள் முந்திய உருவினின்று பிந்திய உருவங்கள் தோன்றுகின்றன. அதாவது பரவாஸுதேவனிடம் இருந்து வ்யூஹவாஸுதேவன், இவனிடமிருந்து ஸங்கர்ஷணன்; இவனின்று ப்ரத்யும்நன், ப்ரத்யும்நனிடமிருந்து அநிருத்தன் என்ற முறையில் இந்நான்கு உருவங்களும் உண்டாகின்றன. இத் திருமேனிகளின் நிறம் க்ருத யுகத்தில் வெண்மையும், திரேதாயுகத்தில் பொன்னிறமும், துவாபரயுகத்தில் பசுமைநிறமும், கலியுகத்தில் கருமையாக யுகந்தோறும் நிறம் மாறிமாறி வரும்.[20] அவை அடியார் குறைகளைக் கேட்கவும் முத்தொழில் இயற்றவும் நிகழ்வன.

**விபவம்**

*அவதாரம்—மேலிருந்து கீழிறங்கி வருதல்.*

நல்லோரைக் காத்து, தர்மத்தை நிலைநாட்ட திருமால் கீழிறங்கிவருதலே அவதாரமாகும். எம்பெருமான் தன் ஆளுகைக்கு உட்பட்ட வஸ்துக்களின் உருவத்தைப் போல் எடுத்துக்கொள்ளும் உருவம் விபவ உருவமாகும்.[21] உயிர்களின் பிறப்பு வினையின் பயனால் ஏற்படுவதாகும். ஆனால் அவதாரம் பரம்பொருளினால் அதன் விருப்பத்தின் பேரில் நிகழ்வதாகும். மானிடப்பிறவி என்பதோ கர்மத்தின் பேரில் நிகழ்கின்றது. ஆனால் இறைவனது அவதாரம் நல்லோரைக் காக்கும் பொருட்டும், தீயோரைத் தண்டிக்கும் பொருட்டும், தர்மத்தை நிலைநாட்டும் பொருட்டும், நிகழ்கின்றது[22] என்று கண்ணபெருமான் கீதையில் கூறுகின்றார்.

**அந்தர்யாமி**

எப்பொருளிலும் உள்இருந்து கரந்து நின்று, அதை ஆட்டுவிக்கும் நிலை அந்தர்யாமித்துவமாகும். ஒவ்வொரு ஜீவனுடைய இதயத்திலும் மிகச் சூட்சுமமான வடிவத்துடன் தடையின்றிப் புகுந்து நிற்கும் திருவுருவம் அந்தர்யாமி உருவமாகும்.[23] யோகம் செய்பவர்கள் மட்டுமே இவ்வந்தர்யாமி ரூபத்தை காணமுடியும்.

**அர்ச்சை**

அர்ச்சை என்பது பெருமானை ஞானக்கண்ணால் காணமுடியாதவர்கள், தம் ஊனக்கண்களால் கண்டு அனுபவிக்கும்படி செம்பினாலோ, மரத்தினாலோ, கல்லினாலோ அமைக்கப்பட்டு திருக்கோயில்களில் எழுந்தருளியிருக்கும் திருமேனிகளாகும். திவ்யதேசங்கள் எனப்படும் நூற்றெட்டுத் திருப்பதிகளிலும் எம்பெருமான் அர்ச்சை நிலையிலேயே காட்சி அளிக்கின்றான்.

வானில் மறைந்திருக்கும் நீரும், கடல்நீரும் மக்களது தாகத்தை தீர்க்கப் பயன்படாதன. அதுபோன்று எம்பெருமானின் பரநிலையும், வ்யூகநிலையும் மக்களது கண்களுக்கு எட்டாதனவாய் அமைந்துள்ளன. மண்ணுள் மறைந்திருக்கும் நீர்போன்று அந்தர்யாமி ரூபம் யோகிகள் மட்டுமே எம்பெருமானைத் தன் யோகத்தால் காணக்கூடியது. விபவ ரூபமோ வெள்ளப்பெருக்குப் போன்று நெடுங்காலத்துக்கு முன்போ, வேறு யுகத்திலோ, திடீரெனவோ நிகழ்வன. ஏரி, குளங்களில் உள்ள நீர் மக்களின் தாகவிடாயினை எப்படி தீர்க்கிறதோ அவ்வாறே மக்கள் யாவரும் நன்கு சேவித்து மகிழ்ந்து தன் ஆன்ம தாகத்தைத் தீர்த்துக்கொள்ளக்கூடியதாய் இருப்பது அர்ச்சாவதாரத் திருமேனியாகும்.

### 3.3.3. பெருமாள் திருமொழியில் ரூபாசக்தி பக்தி

மேற்கூறிய திருமாலின் ஐவகை நிலைகளுள் அர்ச்சை வடிவங்களாகத் திகழும் திருவரங்கநாதனிடத்தும், தில்லைத் திருச்சித்ரக்கூடத்து கோவிந்தராசனிடத்தும் ஈடுபட்டு குலசேகராழ்வார் பக்தி செலுத்துகிறார்.

திருவனந்தாழ்வானாகிய வெண்ணிற திருப்படுக்கையிலே பொருந்தி திருவருள் செய்யும் திருவரங்கநாதனின் திவ்யமங்கள விக்ரகத்தில் ஈடுபட்ட குலசேகரர்தம் ரூபாசக்தி பக்தியைப் பின்வரும் பாடல் அடிகள் நன்கு புலப்படுத்துகின்றன.

இருளிரியச் சுடர்மணிக ளிமைக்கும் நெற்றி
  இனத்துத்தி யணிபணமா யிரங்க ளார்ந்த
அரவரசப் பெருஞ்சோதி யனந்த னென்னும்
  அணிவிளங்கு முயர்வெள்ளை யணையை மேவி
திருவரங்கப் பெருநகருள் தெண்ணீர்ப் பொன்னி
  திரைக்கையா லடிவருடப் பள்ளி கொள்ளும்

வாயோரி ரைஞ்ஞூறு துதங்க ளார்ந்த
வளையுடம்பி னழல்நாக முமிழ்ந்த செந்தீ
வீயாத மலர்ச்சென்னி விதான மேபோல்
மேன்மேலும் மிகவெங்கும் பரந்த தன்கீழ்
காயாம்பூ மலர்ப்பிறங்க லன்ன மாலைக்
கடியரங்கத் தரவணையில் பள்ளிகொள்ளும்

அணியரங்கத் தரவணையில் பள்ளிகொள்ளும்

பயிலரங்கத் தரவணையில் பள்ளி கொள்ளும்
மதிளரங்கத் தரவணையில் பள்ளி கொள்ளும்

களிமலர்சேர் பொழிலரங்கத் துரக மேறிக்

கண்வளரும் கடல்வண்ணர்

அணியரங்கத் தரவணையில் பள்ளி கொள்ளும்

திருவரங்கத் தரவணையில் பள்ளி கொள்ளும்

அன்பொடுதென் திசைநோக்கிப் பள்ளி கொள்ளும்[84]

மேலும், தில்லைத் திருச்சித்ரக்கூடத்தன்னுள் எழுந்தருளியிருக்கும் கோவிந்தராசனிடத்து ஈடுபடும் குலசேகரர் தம் ரூபாசக்தி பக்தியைப் பெருமாள் திருமொழி பத்தாம் திருமொழிப் பாசுரங்களில் நன்கு அறியலாம்.

### 3.4. மதுர பக்தி

பகவானை நாயகனாகக் கருதும் அன்பு மதுரபக்தியாகும். அதாவது ஜீவாத்மா தன்னை நாயகியாகவும், இறைவனை நாயகனாகவும் நினைத்துச் செய்யும் பக்தியாகும்.

குலசேகரர் தம்மை நாயகி நிலையில் வைத்து, கோபியர்களாக மாறி, கண்ணனோடு ஊடுவதாக அமைந்த பெருமாள் திருமொழி—ஆறாம் திருமொழியில் மதுரபக்தி நிறைந்து வழிவதைக் காணலாம். காட்டாக ஒருசில நிலைகளை ஈண்டு காணலாம்.

கண்ணனாகிய காதலன் தன் மார்பை அணைவதற்கு அவன் கூறியபடி யமுனைநதி தீரத்தில்—வார்மணற்குன்றில் —குளிரில் நடுங்கிக்கொண்டு கோபியொருத்தி விடியும்வரை காத்திருக்கிறாள். அவனோ குறித்த நேரத்தில் வரவில்லை. அவனை மற்றொரு சமயம் காண நேர்கிறது. அப்போது அவள் தான் காத்திருந்து ஏமாந்த நிலையினை அவனிடம்,

வார்மணற் குன்றில் புலரநின்றேன்
வாசுதே வாவுன் வரவுபார்த்தே[35]

என்று கோபத்துடன் சுட்டி ஊடுகிறாள்.

தனியே தயிர்கடைந்து கொண்டிருந்த பெண்ணொருத்திக்கு கண்ணபிரான் தானே வலியச் சென்று உதவி செய்ததற்காக[36] வேறொருத்தி அவனோடு ஊடுகிறாள்.

இவ்வாறே,

...யான்விட வந்தவென் தூதியோடே
நீமிகு போகத்தை நன்குகந்தாய்[37]

என்றும்,

...இன்னணை மேலிட் டகன்றுநீபோய்
அற்றை யிரவுமோர் பிற்றைநாளும்
அரிவைய ரோடு மணைந்துவந்தாய்[38]

என்றும் ஆய்ச்சிமார்கள் கண்ணனோடு பலவாறு ஊடுகிறார்கள். இவ்விடங்கள் யாவும் குலசேகராழ்வாரின் மதுர பக்திக்கு தகுந்த சான்றுகளாய் விளங்குகின்றன.

இவ்வாறே குலசேகரர்தம் மதுரபக்தியைப் பின்வரும் தொடர்கள் நமக்குத் தெற்றென விளக்கிக் காட்டுகின்றன.

மருதிறுத் தாயுன் வளர்த்தியோடே
வளர்கின்ற தாலுன்றன் மாயைதானே[39]

என்னுக் கவளைவிட் டிங்குவந்தாய்
இன்னமங் கேநட நம்பி! நீயே[30]

பொய்யொரு நாள்பட்ட தேயமையும்
புள்ளுவம் பேசாதே போகு நம்பீ![31]

இன்னமென் கையகத் தீங்கொருநாள்
வருதியே லென்சினம் தீர்வன்நானே[32]

## 3.5. பூஜாசக்தி பக்தி

பகவத்பூஜையில் ஈடுபடுதல் பூஜாசக்தி பக்தியாகும். பூசை செய்வோர் மானிடராயினும், பகவானேயாயினும் பூசையில் குறைபாடு இருத்தல் கூடாது. இதனால்தான் சிவபெருமானைத் திருமால் நாள்தோறும் ஆயிரம் தாமரைப் பூக்களால் வழிபட்டுவரும் நிலையில் ஓர்நாள் ஆயிரத்துக்கு ஓர் பூ குறைய அதற்கீடாகத் தன் செங்கமலக் கண்ணை எடுத்து பூசையில் குறைபாடின்றி முடித்தார் என்று மணிவாசகர் கூறுவர்.[33] இத்தகைய பக்திதான் பூசாசக்தி பக்தியாகும்.

எம்பெருமானைக் கண்டு களித்து வாழ்த்தி, அணுகி, கூப்பித் தொழுது, உருகி, விழிகளில் நீர் மல்க நின்று, பகவானைக் கண்டு இன்பக் கலவியெய்தி, பூதலத்தில் விழுந்து, புரண்டு அடியவர்க் குழுவினைக் கண்டு அவர்களுடன் இசைந்து உடனிருந்து, வாழ்வது என்றோ என்று குலசேகரரைப் புலம்பச் செய்வது அவருள் அணையாது பொங்கிகொண்டிருக்கும் பக்தி உணர்வேயாகும். ஆழ்வார்தம் இந்நிலைப்பட்ட பக்தியே பூசாசக்தி பக்தியாகும்.

கருமணியைக் கோமளத்தைக் கண்டு கொண்டுஎன்
கண்ணிணைக ளென்றுகொலோ களிக்கு நாளே
மாயோனை மனத்தூணே பற்றி நின்றுஎன்
வாயார வென்றுகொலோ வாழ்த்து நாளே
அம்மான்ற னடியிணைக்கீ ழலர்க ளிட்டுஅங்
கடியவரோ டென்றுகொலோ வணுகு நாளே

கோவினைநா வுறவழுத்தி யென்றன் கைகள்
கொய்ம்மலர்தூ யென்றுகொலோ கூப்புநாளே
மணிவண்ண னம்மானைக் கண்டு கொண்டுஎன்
மலர்ச்சென்னி யென்றுகொலோ வணங்கு நாளே.[34]

என்ற தொடர்கள் எம்பெருமான் திருவடிகளில் மலர்தூவி பூசிக்க வேண்டும்; அடியவரோடு அவனை அணுகி ஏத்திப் பாட வேண்டும்; வாயார அவனை வாழ்த்தி ஏத்த வேண்டும் என்று தன் மனம், வாக்கு, மெய் ஆகிய மூன்று நிலைகளிலும் எம்பெருமானோடு ஈடுபாடுகொள்ள விழையும் குலசேகரரின் நிலையினைப் புலப்படுத்துகின்றன.

"அரவணையில் பள்ளிகொண்டோனே! உன் கமலக் கண்களையும், ஒளிமதிசேர் திருமுகத்தையும் சேவிக்கப் பெற்று என் உள்ளம் மிக உருகும் காலமென்றோ"; "என் கண்கள் நீர்மல்க நிற்கும் நாள் என்றோ?"; "அவனைக் கண்டு இன்பக்கலவி எய்தி வாழுநாள் என்றோ?"; "அவனைக் கண்டு துள்ளிப் பூதலத்தில் புரளும்நாள் என்றோ?"; "அவன் அடியார் தன்னுடன் யானும் இசைந்துடனே இருக்கும்நாள் என்றோ?"[35] என்று குலசேகரர் வேண்டும் நிலைகளில் அவர்தம் பூசாசக்தி பக்தியினை நன்கு உணரலாம்.

### 3.6. ஆத்மநிவேதனாசக்தி பக்தி

முழுமையாகத் தன்னை இறைவனுக்கு அர்ப்பணித்தல் ஆத்மநிவேதனாசக்தி பக்தியாகும். பிரபத்திநெறி என்றும் சரணாகதி என்றும் இப்பக்திநிலை பலவாறு வழங்கப்படும்.

துறவறம் கொள்ளாது, இல்லறம் மேற்கொண்டு, வாழும் இல்லறத்தாரிடம் மிகுந்த வெறுப்புண்டாகி, அவர்களைக் காண்பதிலும், அவர்களோடு தொடர்பு கொள்வதிலும், அருவருப்பான நிலைமை தமக்கு ஏற்பட்டதனை பெருமாள் திருமொழி மூன்றாம் திருமொழிப் பாசுரங்களில் உணர்த்திச் செல்கிறார் குலசேகராழ்வார். மாலுக்கே தான்

மையல் கொண்டொழிந்ததை—மாலெழுந்தொழிந்ததைப் பாடிச் செல்லும் குலசேகராழ்வாரின் இப் பாசுரங்களில் அவர் தம் ஆத்மநிவேதனாசக்தி பக்தியினை காணமுடிகிறது.

மெய்யில் வாழ்க்கையில் வெறுப்புற்று, "பேயரே எனக்கு யாவரும்; யானும் ஓர் பேயனே எவர்க்கும்"[26] என்று உறுதிபட பேசி, திருமாலுக்கே தன்னை அர்ப்பணித்துக் கொண்ட ஆழ்வாரின் ஆத்மநிவேதனாசக்தி பக்தியினைக் கீழ்வரும் பாசுரவரிகள் தெளிவுசெய்கின்றன.

மையல் கொண்டொழிந் தேன்என்றன் மாலுக்கே
மாலெ முந்தொழிந் தேன்என்றன் மாலுக்கே
நார ணன்நர காந்தகன் பித்தனே
......வன்பேய்முலை
உண்ட வாயன்றன் உன்மத்தன் காண்மினே
பேதை மாமணவாளன்றன் பித்தனே
எம்பி ரானுக்கு எழுமையும் பித்தனே
பித்த னாயொழிந் தேன் எம் பிரானுக்கே
பேய னாயொழிந் தேன்எம்பி ரானுக்கே[27]

"குழந்தை மிகுந்த ஆசையோடு தாயிடம் வருகின்றது; ஆனால் தாய்க்கோ மிகுந்த கோபம்; ஆசையோடு வந்த குழந்தையை அள்ளி அணைக்காமல் அப்பால் தள்ளிவிடுகிறாள்; குழந்தை மறுபடியும் அவள் அன்புக்காக ஏங்கி அழுகிறது" இப்படி ஓர் காட்சி.

"அவளோ கற்புக்கரசி. ஆனால் அவனோ கண்டார் இகழும்படி காரியங்கள் ஆற்றுபவன்; கொடிபடரும் கொழு கொம்பாக இல்லாதவன்; ஆனால் அவள், கண் அவனே என்று கொண்டவனை அன்றி வேறொருவரை மனத்தாலும் நினையாக் குலமகள்" இது பெருமாள் திருமொழியில் வரும் மற்றொரு காட்சி.

இவ்வாறு, குலசேகரர் தன்னை "அருள் நினைந்து அழும் குழவியாக", "கொண்டானை அல்லால் அறியாக்

குலமகனாக", "தார்வேந்தன் கோல்நோக்கி வாழும் குடியாக", "வாளால் அறுத்துச் சுடினும் மருத்துவன்பால் மாளாத காதல் நோயாளனாக", "வங்கத்தின் கூம்பேறும் மாப்பறவையாக", "செந்தழலே வந்து அழலைச் செய்திடினும் அந்தரம்சேர் வெங்கதிரோற்கே அலரும் செங்கமலமாக", "மேகங்களானவை மழைபொழியாது மறந்திருந்தாலும் மாமுகிலைப் பார்த்திருக்கும் பைங் கூழாக", "மிகுந்த வேகத்துடன் பாய்ந்து கடலையே சேரும் நதியாக", "நின்னையே தான் வேண்டி நீள்செல்வம் வேண்டாதான் தன்னையேதான் வேண்டும் செல்வமாக"[28] பலவாறு இழித்து உரைத்து அவன் தன்னை நோக்கா விடினும் தான் அவனையே நோக்கும் உணர்வு கூடப்பெற்று "புகலொன்றில்லா அடியேன் உன் அடிக்கீழ் அமர்ந்து புகுந்தேன்" என அவனுக்கே தான் சரணுற்றதை ஆத்ம நிவேதனாசக்தி பக்தி புலப்படும் வகையில் மேற்கண்டவாறு பாடி உருகுகிறார்.

### 3.7.0. குணமகாத்மியாசக்தி பக்தி

குணமகாத்மியாசக்தி பக்தியின் விளக்கம், எம்பெரு மானின் திருக்கல்யாண குணங்கள், பெருமாள் திருமொழி யில் குணமகாத்மியாசக்தி பக்தி ஆகியன ஈண்டு கூறப்பட் டிருக்கின்றன.

### 3.7.1. விளக்கம்

இறைவனுடைய கல்யாண குணங்களில் ஈடுபடல் ஆத்மநிவேனோசக்தி பக்தி யாகும்.

### 3.7.2. எம்பெருமானின் திருக்கல்யாண குணங்கள்

இறைவன் எண்ணிறந்த திருக்கல்யாண குணங்களு டையவன். அவற்றுள் வாத்ஸல்யம், சௌசீல்யம், ஸ்வாமித்துவம், சௌலப்யம் என்பன குறிப்பிடத்தக்கன வாகும்.

**வாத்ஸல்யம்**

குற்றத்தையும் குணமாகக் கொள்ளும் அளவற்ற அன்பு வாத்ஸல்யம் எனப்படும்.

**சௌசீல்யம்**

உயர்ந்தவன் தாழ்ந்தவனோடு கலக்கும்போது தன் உயர்வும், கலக்கப்படுபவனுடைய தாழ்வும் நெஞ்சிற் சிறிதேனும் தோன்றாமல் புரையறக் கலக்கும் பண்பு சௌசில்யமாகும்.

**ஸ்வாமித்துவம்**

தன்னை ஒழித்த மற்றெல்லாப் பொருள்களுக்கும் தலைவனாய் இருத்தல் ஸ்வாமித்துவமாகும்.

**சௌலப்யம்**

அனைத்து உயிர்களும் தன்னைப் பற்றி உய்யும்படி எளியனாயிருத்தல் ஸௌலப்யமாகும்.[39]

இக் குணங்கள் பெருமாள் திருமொழியில் அமைந்துள்ளப் பாங்கினைச் சிறிது காண்போம்.

### 3.7.3. பெருமாள் திருமொழியில் குணமகாத்மியாசக்தி பக்தி

குலசேகரர் தம் முதல் திருமொழியில் எம்பெருமான் தம் கல்யாண குணங்களில் ஒன்றான ஸ்வாமித்துவம் இடம் பெறுகிறது. இதனை,

எம்மாண்பி னயன்நான்கு நாவி னாலு
மெடுத்தேத்தி ஈரிரண்டு முகமுங் கொண்டு
எம்மாடு மெழிற்கண்க ளெட்டி னோடும்
தொழுதேத்தி யினிதிறைஞ்ச நின்ற செம்பொன்[40]

என்ற பாடலாலும்,

இணையில்லா இன்னிசையாழ் கெழுமி இன்பத்
தும்புருவும் நாரதனு மிறைஞ்சி யேத்த
துணையில்லாத் தொன்மறைநூல் தோத்தி ரத்தால்
தொன்மலர்க்க ணயன்வணங்கி யோவா தேத்த[41]

என்ற பாடலாலும் அறியலாம்.

"பிரம்மா, சிவன், இந்திரனோடு கூடிய தேவர்குழாம், மற்றும் தெளிமதிசேர் முனிவர்களும் ஒருவருக்கொருவர் நெருக்கித் தள்ளி, பார்த்த பார்த்தவிடமெங்கும், மலர் தூவிச் சென்றுசேரும் திருவரங்கம்"[42] எனச் சிவனும், அயனும் தேடி அருள்பெறும் முழுமுதற்பொருள் திருமாலே என்கிறார் குலசேகராழ்வார்.

வன்பெருவா னகமுய்ய வமர ருய்ய
மண்ணுய்ய மண்ணுலகில் மனிச ருய்ய
துன்பமிகு துயரகல அயர்வொன் றில்லாச்
சுகம்வளர அகமகிழும் தொண்டர் வாழ
அன்பொடுதென் திசைநோக்கிப் பள்ளி கொள்ளும்
அணியரங்கன்[43]

இவ்வாறு எம்பெருமானாகிய திருமால் உலகோர் தன்னைப் பற்றி உய்யும்படிக்குத் திருவரங்கனாக எழுந்தருளி காட்சி யளிப்பது அவனது சௌலப்ய, வாத்ஸல்ய குணங் களினாலேயாகும்.

திருமாலின் திருக்கல்யாண குணங்களை மனம் குளிரப் பாடும் குலசேகராழ்வாரின் பெருமாள் திருமொழியில், அவனது கல்யாண குணங்களில் ஒன்றான ஸௌலப்ய குணத்தினைக் கீழ்வரும் பாசுர வரிகளால் அறியலாம்.

வந்தெதிர்ந்த தடாகைதன் னுரத்தைக் கீறி
வருகுருதி பொழிதரவன் கணையொன் றேவி
மந்திரம்கொள் மறைமுனிவன் வேள்வி காத்து
வல்லரக்க ருயிருண்ட மைந்தன் காண்மின்[44]

இராமனாக அவதரித்து, தாடகை முதலான அரக்கரை அழித்து அனைத்து உயிர்களும் தன்னைப் பற்றி உய்யும்படி எளியனாயிருக்கும் எம்பெருமான் விசுவாமித்திர முனிவனது வேள்வியைக் காத்துக் கொடுத்தது அவனது ஸௌலப்ய குணத்தினைப் புலப்படுத்தும் வகையில் அமைந்துள்ளது.

சடாயுவை வைந்தத் தேற்றிய[43]

செயலும்,

வனமருவு கவியரசன் காதல் கொண்டு வாலியைக்
கொன்ற[44]

செயலும் எம்பெருமானின் சௌலப்ய குணத்தினைப் புலப் படுத்துகின்றன.

இவ்வாறு குலசேகராழ்வாரின் குணமகாத்மியாசக்தி பக்தி அவர்தம் பெருமாள் திருமொழியில் பலவாறு பேசப் படுகின்றது.

### 3.8. பரமவிரஹாசக்தி பக்தி

"சேஷத்வமில்லாதபோது ஸ்வரூபமில்லை"[47] என்கிறது முமுட்சுப்படி. ஆன்மாவிற்குச் சொரூபம் சேஷத்துவ மாகும்.

ஜீவாத்மா—பரமாத்மா உறவின் சிறப்பு குலசேகரரின் பாசுரங்கள் பலவற்றில் பேசப்படுகின்றது. பகவானை விட்டுப் பிரிந்திருக்கும் நிலையில் ஜீவாத்மா வேதனை கொண்டு உருகும் நிலையே பரமவிரஹாசக்தி பக்தியாகும்.

அரிசினத்தா லீன்றதாய் அகற்றிடினும் மற்றவள்தன்
அருள் நினைந்தேயழுங்குழவி அதுவேபோன்
றிருந்தேனே[48]

என்று தாய்—சேய் நிலையில் பரமாத்மா—ஜீவாத்மா உறவினைப் பாடிச் செல்கிறார் ஆழ்வார்.

பெருமாள்திருமொழி ஐந்தாம் திருமொழியில், கணவன்—மனைவி, அரசன்—குடிகள், மருத்துவன்—நோயாளி, வான்—பைங்கூழ், கடல்—நதிகள் எனப் பல நிலைகளில் தனது இழிநிலையை எடுத்துரைத்து, மாலவனிடம் சரணடைந்து, சேதனசொரூபத்தை நமக்கு உணர்த்துகிறார்.

எங்கும்போய்க் கரைகாணாது எறிகடல்வாய் மீண்டேயும்
வங்கத்தின் கூம்பேறும் மாப்பறவை போன்றேனே[49]

என்னும் ஆழ்வார்தம் வாக்கும்,

செந்தழலே வந்துஅழலைச் செய்திடினும் செங்கமலம்
அந்தரம்சேர் வெங்கதிரோற் கல்லால் அலராவால்
வெந்துயர்வீட் டாவிடினும் வித்துவக்கோட் டம்மா! உன்
அந்தமில்சீர்க் கல்லால் அகம்குழைய மாட்டேனே[50]

என்னும் பாடலும், சேதனசொரூபத்தையும், சீவாத்மா—பரமாத்மா தத்துவச் சிறப்பினையும் புலப்படுத்திக் காட்டுகின்றன.

பரமாத்மாவைப் பிரிந்த அளவில், சீவாத்மா பலவாறாகப் புலம்பும்நிலையை குலசேகராழ்வாரின் ஒன்பதாம் திருமொழிப் (பெருமாள் திருமொழி) பாசுரங்களில் காணலாம்.

நீபோக வென்னெஞ்சம் இருபிளவாய்ப்
போகாதே நிற்கு மாறே[51]
எம்மானை யென்மகனை யிழந்திட்ட
இழிதகையே னிருக்கின் றேனே[52]

என்று பலவாறு புலம்பும் தசரதன் புலம்பல் முழுவதும் குலசேகராழ்வாரின் பரமவிரஹாசக்தி பக்திக்கு தகுந்த சான்றாக அமைந்துள்ளது.

## குறிப்பெண் விளக்கம்

1. Swami Chinmayananda, LOVE - DIVINE NARADA BHAKTI SUTRA, Sutra. 82.
2. பெரு. திரு. நான்காம் திருமொழி.
3. பரிமேலழகர், (உரை.), திருக்குறள், ஒன்பதாம் பதிப்பு, (சென்னை, 1964), மக்கட்பேறு 6, சுப்பிரமணிய பாரதியார், மகாகவி பாரதியார் கவிதைகள், மூன்றாம் பதிப்பு, (திருநெல்வேலி, 1968), கண்ணன்பாட்டு—கண்ணன் என் குழந்தை.
4. பெரு. திரு. 7:1.
5. மேற்படி 7:2.
6. மேற்படி 7:3.
7. பெரியதிருமொழி 1-7:4.
8. பெரு. திரு. 7:5.
9. குறள், 64.
10. பெரு. திரு. 7:6.
11. மேற்படி 7:7.
12. மேற்படி 7:10.
13. மேற்படி 7:9.
14. மேற்படி 8:1.
15. மேற்படி 8:2, 8:4, 8:6, 8:8, 8:10, 8:3, 8:5, 8:7, 8:9.
16. மேற்படி 8:2, 8:5, 8:6, 8:6, 8:7, 8:8, 8:9, 8:9.
17. பெரு.திரு. 9:1.
18. மேற்படி 9:2, 9:3, 9:4, 9:5, 9:6, 9:7, 9:8, 9:9, 9:10.

19. பரிபாடல் 13. 26-29.

20. ஸ்ரீராமதேசிகாசார்யர், சில்லரை ரகஸ்யங்கள் (முதற்பாகம்), (தஞ்சை, 1972), ப. 371.

21. மேற்படி ப. 372.

22. ஸ்ரீமத் பகவத்கீதை 4. 8. ஐந்தாம் பதிப்பு, (திருப்பராய்த்துறை, 1964).

23. ஸ்ரீராமதேசிகாசார்யர், சில்லரை ரகஸ்யங்கள் (முதற்பாகம்) ப. 372.

24. பெரு. திரு. 1:1, 1:2, 1:3, 1:4, 1:5, 1:6, 1:7, 1:8. 1:10.

25. மேற்படி 6:1.

26. மேற்படி 6:2.

27. பெரு.திரு. 6:4.

28. மேற்படி 6:6.

29. மேற்படி 6:3.

30. மேற்படி 6:5.

31. மேற்படி 6:7.

32. மேற்படி 6:8.

33. ப. இராமநாதபிள்ளை (உரை.) திருவாசகம் தெளிவுரை, முதற்பதிப்பு, சென்னை 1969, திருத்தோள்நோக்கம்—பாடல் 10.

34. பெரு.திரு. 1:1, 1:2, 1:3, 1:4, 1:5.

35. மேற்படி 1:6, 1:8, 1:9, 1:10.

36. மேற்படி 3:8.

37. மேற்படி 3:1, 3:2, 3:3, 3:4, 3:5, 3:6, 3:7, 3:8.

38. மேற்படி 5:1, 5:2, 5:3, 5:4, 5:5, 5:6, 5:7, 5:8, 5:9.

39. கிருஷ்ணவேணி அம்மையார், செம்பொருள், ப. 126.
40. பெரு.திரு. 1:3.
41. மேற்படி 1:5.
42. பெரு.திரு. 1:6.
43. மேற்படி 1:10.
44. மேற்படி 10:2.
45. மேற்படி 10:6.
46. மேற்படி 10:6.
47. எஸ். கிருஷ்ணவேணி அம்மையார், செம்பொருள், ப. 66.
48. பெரு.திரு. 5:1.
49. மேற்படி 5:5.
50. மேற்படி 5:6.
51. மேற்படி 9:4.
52. மேற்படி 9:6.

இயல் நான்கு

# பெருமாள் திருமொழியில் திருமாலவதாரங்கள்

## 4.0. பெருமாள் திருமொழியில் திருமாலவதாரங்கள்

இவ்வியலில் சமயம், இந்து சமயம், வைணவம், அவதாரங்கள், பெருமாள் திருமொழியில் இடம்பெறும் திருமால் அவதாரங்கள் ஆகியன விளக்கப்பெறுகின்றன.

## 4.1.0. சமயம்

ஈண்டு சமயத்தோற்றம், சமயம் சொல்பொருள் விளக்கம், சமயப் பயன் ஆகியன உரைக்கப்பெற்றுள்ளன.

## 4.1.1. சமயத்தோற்றம்

இறைவன் உலகினைப் படைத்தான். உலகத்து உயிர்களை உருவாக்கினான். மன உணர்வுடைய மனிதனைப் படைத்தான். உலகினை மனிதன் தன் வயங்கொண்டு படிப்படியாக முன்னேறினான். சிந்திக்கும் திறத்திலும் தன்னை வளர்த்துக்கொண்டான். கடலின் கொந்தளிப்பு, மழை, இடி, மின்னல், பூகம்பம், புயல் முதலிய இயற்கைச் செயல்களுக்குப் பயந்து நடுங்கிய மனிதன், தன்னைவிடப் பேராற்றல்கொண்ட சக்தியினை உணரத் தொடங்கினான். முதலில் பயத்தின் காரணமாக இயற்கையை வழிபட்ட மனிதன், காலப்போக்கில் இயற்கையின் தோற்றத்துக்குக்

காரணமான ஏதோ ஓர் ஆற்றல் உண்டென உணர்ந்து அதனை வழிபடத் தொடங்கினான். அந்த ஒன்றிற்குக் 'கடவுள்' என்று பெயரிட்டான். இந்தக் கடவுளை உணரவும் உணர்ந்து அதன்வழி மனித இனத்தைப் பக்குவப்படுத்தவும், சமயம் தோன்றியது.

## 4.1.2. சமயம்—சொல்பொருள் விளக்கம்

சமயம் என்பதற்கு எல்லை, மதம், உடன்படிக்கை, தீட்சை, மரபு, என்று பல பொருள்களுண்டு.[1] சமயம் என்ற சொல் 'சமை' என்பதிலிருந்து தோன்றியிருத்தல் வேண்டும். 'சமை' என்பதற்கு 'ஒழுங்குபடுத்து' என்று பொருள் கொள்ளலாம். "ஒழுங்குபடுத்தப்பட்டு நன்முறையில் வளர்ச்சி அடைந்த தெய்வநம்பிக்கையே சமயமாகும்".[2] எனவே, சமயமென்பது அவனருள் பெற்று, அவனடிச் சேர ஒழுங்குபடுத்துவது—பக்குவப்படுத்துவதாகும்.

சமயம் என்னும் சொல்லைக் குறிக்கும் 'ரிலிஜன்' என்ற ஆங்கிலச்சொல் 'ரீலிகெரி' அல்லது 'ரிலிகாரி' என்னும் சொல்லிலிருந்து பிறந்திருக்கலாம் என்றும், முதலது "திரும்பத் திரும்பப் படிக்கப்பட்டுச் சிந்திக்கப்பட்டது" என்ற பொருளையும், பின்னது "கட்டுவது" என்ற பொருளையும் தருவதாக ஆக்ஸ்போர்டு புதிய ஆங்கில அகராதி கூறுகிறது.[3]

நம்மை பிறக்கவைத்து, வாழவைத்து, ஆட்டுவிக்கும் ஆட்டுவானைப் பற்றி சிந்திப்பதே சமயத்தின் அடிப்படை நோக்கமாகும். மனிதனுக்கும் மனித நிலைக்கு மேற்பட்டதாக உள்ள ஆற்றலுக்கும் உள்ள தொடர்பு சமயத்தில் சிந்திக்கப்படுகிறது. உலகினை வழிநடத்தும் திருவருள் ஒன்று உண்டு, என நம்பிக்கை வைத்து அத் திருவருளின் குறிப்பை அறிய முயலல்—அறிந்து அதன்வழி நடத்தல் சமயமாகும். அதாவது ஒரு பெருங்குழுவினரின் திண்ணமான நம்பிக்கையாகும்.[4]

மனித இனத்தில் தெய்வ நம்பிக்கையில் ஏற்பட்ட வேறு வேறு போக்குகளினால் வெவ்வேறு சமயங்கள் தோன்றலாயின. சமயம் என்பது பொதுப் பெயராய் நிற்க, தாம் வணங்கும் இறைவனுக்கேற்ப பெயர்களைத் தாங்கி பல்வேறு சமயங்கள் தோன்றின. ஆறுகள் பல ஒரே கடலில் கலப்பது போன்று, பல சமயங்களின் நோக்கங்களும் 'கடவுள்' என்ற ஒன்றையே குறித்து, மனித சமுதாயத்தின் உய்வினை நோக்கியே விளங்குகின்றன.

### 4.1.3. சமயம்—பயன்

மனிதனை பண்பாடுடையவனாக ஆக்குவது சமயமாகும். மக்களை மாக்கள் தன்மையிலிருந்து விடுவித்து அவர்கள் வாழ்வாங்கு வாழ சமயம் பெரிதும் துணை புரிகிறது. மேலும் சமயம் மனிதன் இறையருள் பெற்று அவனடிச் சேர அவனைப் பக்குவப்படுத்துகிறது. நடை, உடை, பாவனை, பண்பாடுகளில் மக்கள் வேறுபடுகின்றனர். ஆனால் சமயம்—மத அடிப்படையில் ஒன்றுபட்டு நிற்கின்றனர். "வேறுபாடுகளின் இடையே ஒருமைப் பாட்டைக் காட்டி எல்லா மக்களையும் ஒன்றாக்குகிறது சமயம் ஒன்றேதான்."[5]

### 4.2. இந்து சமயம்

'சிந்து' நதிக்கரையில் வாழ்ந்த மக்கள் பாரதத்திற்கு வருகை தந்த அயல்தேசத்தவர்களால் 'இந்து' என அழைக்கப்பட்டனர்; அவ்விந்துக்களின் சமயம் இந்துசமயமானது.[6] "பிற உயிர்கள் துன்பப்படுவது கண்டால் அந்தத் துன்பம் தனக்கு வந்ததாகக் கருதுபவன் இந்து"[7] ஆவான்.

### 4.3. வைணவம்

விஷ்ணுவை முழுமுதற் கடவுளாகக் கொண்ட சமயம் வைணவமாகும். காக்கும் கடவுளாக விள்ங்கும் திருமால் உலகினைப் படைப்புவராகவும், யுகமுடிவில் உயிர்களை

ஒடுக்குபவராகவும் விளங்குகிறார் என்பது வைணவர்களின் கொள்கை. "திருமாலை வழிபடும் சமயத்தினர் வைணவராவர்."[8]

'விஷ்ணு' என்ற சொல் 'விஷல்வ்யாப்தௌ' என்ற தாதுவிலிருந்து வந்த சொல்லாகும். விஷ்ணு என்ற சொல்லுக்கு 'எங்கும் வியாபித்துள்ளவன்' என்று பொருள்.[9]

சங்க இலக்கியத்தில் பரிபாடல், நற்றிணை திருமால் பற்றிய கதைகளை நேரடியாக, உவமை வாயிலாக உணர்த்தும் பாடல்களால் வைணவம் சங்க காலத்தில் சிறந்த இடம் பெற்றிருந்தது என்பது தெளிவாகிறது. இவ்வாறு தொன்றுதொட்டு தமிழகத்தில் வைணவம் ஓர் சிறந்த இடம்பெற்று நிலவியிருந்தது. இவ்வைணவத்தில் திருமாலுக்குப் பல அவதாரங்கள் படைக்கப்பெற்றன. இந்துசமயத்தில் வைணவச் சமயம் இறைவனுக்கு அவதார நிலையை உண்டாக்கி, தன் கொள்கைகளை உலகில் வலியுறுத்த முனைந்தது.

## 4.4.0. அவதாரங்கள்

ஈண்டு, அவதாரம் —விளக்கம், அவதாரநோக்கம், அவதாரங்கள், அவதாரவகைகள், தசாவதாரங்கள், தசாவதார நோக்கமும், பொருத்தமும் ஆகியன உரைக்கப் பெற்றுள்ளன.

## 4.4.1. அவதாரம்—விளக்கம்

'அவதார்' என்ற வடமொழிச்சொல் தமிழில் 'அவதாரம்' என்று வழங்கப்படுகிறது. அவதார் என்ற சொல்லை 'அவ' என்றும், 'த்ரி' என்றும் பிரித்து, 'அவ' என்பதற்கு 'இறங்குதல்' என்றும், 'த்ரி' என்பதற்கு 'கடந்து செல்லுதல்' என்றும் பொருள்கொள்ளலாம்.[10] அதாவது எம்பெருமான் தமது சௌலப்ய, வாத்ஸல்யா குணங்

களினால் உயிர்களை உய்விக்க பூமிக்கு இறங்கிவருதல் அவதாரமாகும்.

அவதாரங்களைப் பற்றி வேதங்களிலும் குறிப்புக்கள் காணப்படுகின்றன. "இருக்குவேதம், உலகளந்த திருவிக்கிரம அவதாரத்தைக் குறிப்பிடுகின்றது என்றும், வேதப்பகுதி யான சதபதிப்பிராமணம் மச்சம், வாமனம், வராகம், ஆகிய அவதாரங்களைக் கூறுகின்றது என்றும், யசுர் ஆரண்யகம் கூர்மத்தையும் நாராயணவல்லி வராகத்தையும் இருக்கு, யசுர் மந்திரங்களில் சில நரசிங்கத்தையும் அறிமுகப்படுத்துகின்றன என்றும், யசுர்வேதம் இராமனை யும் சாந்தோக்யம் கிருஷ்ணனையும் குறிப்பாகத் தெரிவிக் கின்றன என்றும், இனி வரப்போகும் அவதாரமாகிய கல்கியைப்பற்றிய குறிப்பு தைத்திரீய உபநிடதத்தில் உள்ளது என்றும் கூறுவர்.[11]

முழுமுதற் கடவுளாக விஷ்ணுவை வணங்கும் வைணவத் தில் அவதாரம் முக்கிய இடம்பெறுகிறது. பிறவா யாக்கைப் பெரியோனை வணங்கும் சைவசமயத்தைத் தவிர பௌத்த, சமண, கிறித்துவ சமயங்களும் அவதாரக் கொள்கையை ஏற்றுக்கொண்டிருக்கின்றன.

### 4.4.2. அவதார நோக்கம்

இறைவன் உயிர்களின் மீதுள்ள கருணையாலும், தருமம் தலைசாயும் நேரத்தில் அதனை நிலைநிறுத்த வேண்டியும், உலகம் மேலும்மேலும் உயர்ந்து முழுநலம் அடையவும் அவதாரம் செய்கின்றான். "நல்லோரைக் காக்கவும், தீயோரைத் தண்டிக்கவும், தருமத்தை நிலை நாட்டவும் நான் யுகந்தோறும் பிறக்கிறேன்" என்று கீதை அவதார நோக்கத்தை தெளிவுறுத்துகிறது. காலத்தினியல் பிற்கும் மனிதனுடைய போக்கிற்கும் ஏற்றவாறு புதிய அறநெறிகளைக் காட்டி மக்களை உய்வித்தல் அவதார நோக்கம் எனலாம்.

### 4.4.3. திருமாலவதாரங்கள்

எம்பெருமானுடைய நிலைகள் ஐந்து. அவை பரம், வ்யூகம், விபவம், அந்தர்யாமி, அர்ச்சை ஆகியன. இவ்வைந்தும் அவதாரங்களாகக் கொள்ளப்படுகின்றன.

**பரம்**

நீளாதேவி, திருமகள், மண்மகளுடன் வைகுந்தத்தில் இருக்குமோர் அரியநிலை பரத்துவ நிலையாகும்.

**வ்யூகம்**

வ்யூகம் என்பது பிரிந்து நிற்றலை குறிக்கும். அதாவது பரத்தில் முழுமுதற் பொருளான பரவாசுதேவன் ஸங்கர்ஷணன், வாசுதேவன், பிரத்யும்நன், அநிருத்தனாகப் பிரிந்து உலகை நடத்துகின்றான். இந்நிலையை கடல்நீருக்கு ஒப்பிடலாம்.

**விபவம்**

விபவம் என்பது திருமால் உலகினை உய்விக்க செய்தருளிய பல அவதாரங்கள் ஆகும். இவ்வவதாரங்கள் முப்பதுக்கும் மேற்பட்டுள.[19]

**அந்தர்யாமி**

எல்லா உயிர்களிலும் இறைவன் உறைந்து வாழினும், தன்னையே நினைந்து உருகும் பக்தரின் மனத்தில் கோயில் கொண்டு அவர்கட்கு அவன் காட்சிதரும் அரியநிலை அந்தர்யாமியமாகும். பூமிக்குள் சுரந்திருக்கும் நீரின்நிலை இந்நிலையாகும் என்பர்.

**அர்ச்சை**

தனது பக்தர்களின் விருப்பப்படி கல்லாலோ, மண்ணாலோ, செம்பாலோ அவர்கள் செய்துவைத்த

உருவத்தில் இறைவன் வந்து தங்கி அருளும் நிலை அர்ச்சை நிலையாகும். இந்நிலையில் இறைவன் எல்லோரும், எப்போதும் தன்னைக் கண்டு வழிபடும் அளவுக்கு எளியனாகின்றான்.

### 4.4.4. அவதாரவகைகள்

ஐந்து நிலைகளாக உள்ள இறைவன் (திருமால்) கொள்ளுகின்ற அவதாரங்கள் மூன்று வகைப்படும். அவை பூரண அவதாரம், ஆவேச அவதாரம், அம்ச அவதாரம் ஆகியன.

#### பூரண அவதாரம்

எம்பெருமான் தானே, தன் முழு சக்தியுடன் சோதி உருவை வைகுந்தத்தில் விட்டுவிட்டு இப் பூவுலகில் பிறவி யெடுப்பது இவ்வவதாரமாகும். இராமன், கண்ணன் அவதாரங்களை இந்நிலையில் உள்ளடக்கலாம்.

#### ஆவேச அவதாரம்

திருமால் ஓர் உருவில் தனது ஓரளவு சக்தியை மட்டும் ஒரு குறிக்கோளிற்காக ஓர் உருவில் தற்காலிகமாக புகச் செய்வது ஆவேச அவதாரமாகும். திருமாலின் பரசுராம அவதாரம் ஆவேச அவதாரமே.

#### அம்ச அவதாரம்

திருமாலின் அம்சங்களாகத் திகழும் சங்கு, சக்கரம், வில் முதலிய அவனது திவ்யாயுதங்கள் மானிடரை உய்விக்க எம்பெருமான் கட்டளைப்படி மனிதரிடையே தோன்றுவது அம்சாவதாரம் ஆகும். இருடிகள், மனுக்கள், தேவர்கள், மனுவின் புத்திரர்கள் அனைவரும் திருமாலின் அம்சாவதாரமாவார்கள். ஆழ்வார்கள் அனைவரையும் அம்சாவதாரமாகக்கொள்ளலாம், "ஸஜாதீயர்களைக் கொண்டே இந்த

ஸம்ஸாரிகளைத் திருத்தி வசப்படுத்திக்கொள்ள வேணுமென்று துணிந்து இந் நிலவுலகில் பல வ்யக்திகளிடத்திலே விசேஷ கடாக்ஷம் செய்தருளினான். அவர்களே ஆழ்வார்கள் ஆசாரியர்கள் என்னப்படுகிறார்கள்"[13] என்பர் வைணவப்பெரியோர் அண்ணங்கராசாரியர்.

### 4.4.5. தசாவதாரங்கள்

திருமாலின் பத்து அவதாரங்களை மூன்று நிலைகளில் அடக்குவர். விலங்குநிலை, ஒன்று. மற்றவை விலங்கும் மனிதனும் கலந்த ஒரு நிலை மனித நிலை ஆகியன. திருமாலின் பத்து அவதாரங்களும் பரிணாமத்தின் முக்கியப் படிகளை உணர்த்துகின்றன. மீன், ஆமை, பன்றி வடிவங்கள் மனித இயற்கையினும் தாழ்ந்த விலங்கு தன்மையை குறிக்கின்றன. நரசிம்ம அவதாரம் விலங்குலகு மனித உலகுக்கு மாறுவதையும், வாமனாவதாரம் மனித இயற்கை முழு வளர்ச்சி அடையாதிருந்த நிலையையும் குறிக்கின்றன. பரசுராம அவதாரம் மனிதன் வளர்ச்சியடையாத ஒருநிலையில், கொடிய விலங்குத் தன்மையதானப் பழிவாங்கும் நாகரிகமற்ற நிலையில் இருந்ததை குறிக்கின்றது. இராமாவதாரம் தூய நற்குணம் நிரம்பிய மக்கட் பண்பின் நிலையினை உணர்த்துகின்றது. இச்சையொன்றும் கொள்ளாமல் உலகிலுள்ள தீயசக்திகளுடன் போராடி மனிதன் தெய்வநிலைக்கு உயர்வதை கிருஷ்ணாவதாரம் உணர்த்துகின்றது. எல்லா உயிர்களிடமும் இரக்கம் வேண்டும் என்பதை, தீமையை, ஒழுங்கின்மையை வெட்டி வீழ்த்தப்போவதை வாளொடு தோன்றும் கல்கியவதாரம் உணர்த்துகின்றது.[14]

### 4.4.6. தசாவதார நோக்கமும், பொருத்தமும்

பொதுவாக இறைவனது அவதாரங்கள் உலக உயிர்களை உய்விக்கும் நோக்கமுடையனவாயினும், அவை தம் தம் நிலையில் சிறப்பும், பொருத்தமும் உடையனவாய் அமைந்துள்ளன,

### மச்ச அவதாரம்

மச்ச அவதாரத்தின் நோக்கம் ஹயக்கிரீவனால் கவர்ந்துச் செல்லப்பட்டு, கடலுக்கடியில் மறைக்கப்பட்ட வேதங்களை மீட்டு, உயிர்களுக்கு உணரவைத்து அவர்களை உய்வித்த லாகும். திருமால் அவ்வேதங்களை மீட்கும் செயல்புரிய நீருக்குள் வாழும் இயல்புடையதாய், விரைந்து செல்லும் ஆற்றலுடையதாய் விளங்கும் மீனாக அவதரித்தது பொருத்தமேயாகும்.

### கூர்ம அவதாரம்

மந்திரகிரிமலை மத்தாகிய நிலையில் கடலில் அமிழ்ந்து போகாது தாங்கும் நோக்கத்தில் அச் செயலுக்குப் பொருத்தமான கூர்ம அவதாரத்தினைத் திருமால் மேற் கொண்டார். இவ்வவதாரத்தால் பரம்பொருள் உலக உயிர்காக்க இழிந்த பிறவி எடுக்கவும் பின்வாங்கவில்லை என்ற செய்தி தெரிகிறது.

### வராக அவதாரம்

கடலுள் மூழ்கிக்கிடக்கும் பூமியை வெளிக்கொணரும் பொருட்டு, திருமால் இவ்வவதாரம் செய்தார். கடலுள் மூழ்கியுள்ள பூமியை கிளர்ந்தெடுத்தலுக்கு ஏற்றதாக, கோடுகளுடைய வராகமாக அவர் அவதரித்தது சாலப் பொருத்தமே.

### நரசிம்ம அவதாரம்

"தன் பக்தரை எவ்வழியும் பரம்பொருள் காக்கும்" என்பதை உணர்த்துவதாய் நரசிம்ம அவதாரம் விளங்கு கிறது. இரணியனின் வரத்திற்கப்பாற்பட்ட உருவில் அவனை அழிக்கவேண்டி திருமால் நரசிங்கமாக அவதரித் தார்,

**வாமன அவதாரம்**

'யான், எனது' எனும் அகப் பற்று, புறப் பற்றுக்களை நீக்கி, உயிர்கள் வாழவேண்டும் என்பதை உணர்த்தும் நோக்கமுடையது வாமன அவதாரமாகும். 'யான்' என்னும் செருக்குற்ற, மாவலியை அடக்குமுகமாகத் திருமால் தன்னை மறைத்த நிலையில் வாமனனாக அவதாரம் செய்தார்.

**பரசுராம அவதாரம்**

உலகத்தில் தீமையை ஒழித்து, உலக பாரத்தைக் குறைத்து உய்வித்தல் இவ்வவதாரத்தின் நோக்கமாகும். இச் செயலுக்கேற்றவாறு, கோபமும், ஆவேசமும் மிக்க பரசுராமராகத் திருமால் அவதரித்தார்.

**இராம அவதாரம்**

தருமத்தை நிலைநாட்டுதலும், அபயம் புகுந்தவரை ஆதரித்தலும் இவ்வவதாரத்தின் நோக்கங்களாகும்.

**கிருஷ்ண அவதாரம்**

சேவையே வாழ்க்கையின் இலட்சியம் என்பதை உணர்த்தும் நோக்கத்தை நிறைவுசெய்ய பொருத்தமானதாக கிருஷ்ணாவதாரம் அமைந்துள்ளது.

**கல்கி அவதாரம்**

கல்கியவதாரத்தில் திருமால் உலகத்தீமைகளை வெட்டி வீழ்த்தும் நோக்கத்திற்கேற்ப வாளோடு அவதரிக்கின்றான்.

**4.5.0. பெருமாள் திருமொழியில் இடம்பெறும் திருமால் அவதாரங்கள்**

பெருமாள் திருமொழியில் விபவ அவதாரங்களில் குறிப்பாக தசாவதாரங்களில் இராம, கிருஷ்ண, வாமன,

பரசுராம, வராக அவதாரங்கள் இடம்பெற்றுள்ளன. திருவரங்கம், திருவேங்கடம், திருவித்துவக்கோடு, திருக் கண்ணபுரம், தில்லைத் திருச்சித்ரக்கூடம் ஆகிய திருத்தலங் களில் எழுந்தருளியுள்ள எம்பெருமானின் அர்ச்சை வடிவங் களும் இடம்பெறுகின்றன. திருப்பாற்கடலில் வாசுதேவன், ஸங்கர்ஷணன், அநிருத்தன், ப்ரத்யும்னன் என நான்காகப் பிரிந்து காணப்படும் திருமாலின் வியூகநிலையையும் பெருமாள் திருமொழியில் காணலாம். எம்பெருமானின் பரத்துவநிலையும் பெருமாள் திருமொழியில் பேசப்படு கிறது.

### 4.5.1.0. விபவ அவதாரங்கள்

பெருமாள் திருமொழியில் விபவ அவதாரங்களில் வராக, வாமன, பரசுராம, இராம, கிருஷ்ண அவதாரங்கள் இடம் பெறுகின்றன.

### 4.5.1.1. வராக அவதாரம்

பூமியினைப் பாய்போல் சுருட்டி கடலுக்குள் ஒளித்து வைத்திருந்த இரண்யகசிபுவை அழித்து, பூமியினைத் தன் கோரப்பற்களால் திருமால் வெளிக்கொணர்வது வராக அவதாரமாகும்.

வராகம் என்ற வடமொழிச் சொல்லை, அறிஞர் அக்ர வாலா 'வர', 'அக' எனப் பிரித்து, ஆற்றல்விதியைக் குறிப்ப தாக பொருள் கொள்கிறார்.[15] ஏனம், பன்றி, கேழல் ஆகியன வராகம் என்பதன் தமிழ்ப்பெயர்களாகும்.

திருவேங்கட மலையில் இறைவனாகிய திருமால் ஆதி யில் வராகமூர்த்தியாகவே எழுந்தருளினார். பின்னர்தான் திருவேங்கடவனாக அருள்செய்தார்.[16]

இவ்வவதாரம் பற்றி குலசேகராழ்வார் தன் பெருமாள் திருமொழியில் ஓரிடத்தில் மட்டுமே பின்வருமாறு குறிப் பிட்டுள்ளார்.

ஏனமாய்நிலம் கீண்டதும்[17]

### 4.5.1.2. வாமன அவதாரம்

'யான்' என்று இறுமாந்திருந்த மாவலியின் செருக்கை அழிக்க திருமால் குறள் வடிவினனாக அவதரித்து அவனிடம் மூவடிமண் இரந்து பெற்று, ஓங்கிவளர்ந்து, திருவிக்கிரம வடிவுடன் ஓரடியால் வான் முழுதையும், மற்றொரு அடியால் பூமியையும் அளந்து, தன் மூன்றாமடியை மாவலியின் சிரசின் மீது வைத்து அவனை ஆட்கொண்டருளியது வாமன அவதாரமாகும்.

வாமனன் என்ற சொல் 'குறுகியவன்', 'அழகியவன்' என்ற பொருள்களை உணர்த்துகிறது.[18]

பெருமாள் திருமொழியில் வாமனா அவதாரம் ஓரிடத்தில் மட்டும் குறிப்பிடப்பெற்றுள்ளது.

மண்ணளந்ததும்[19]

### 4.5.1.3. பரசுராம அவதாரம்

'பரசு' என்னும் கோடலியை ஆயுதமாக கொண்டவன் பரசுராமன். தனது தந்தையாகிய ஜமத்கனி முனிவருடைய காமதேனுவின் பொருட்டு கார்த்தவீரியார்ச்சுனனைக் கொன்ற பரசுராமர், தனது தந்தையைக் கொன்ற கார்த்தவீரியார்ச்சுனனின் புதல்வர்களையும் கொன்று. இருபத்தோரு அரச வம்சத்ினரை அழித்தார் என்பது இவ்வவதாரம் பற்றிய செய்தியாகும்.[20]

வாமன அவதாரத்தின் பின்நிகழ்வது பரசுராம அவதாரமாகும். பழிவாங்கும் உணர்ச்சியால் மனிதன் விலங்கு நிலைக்குத் தாழ்கிறான் என்பதனை இவ்வவதாரம் உணர்த்துகிறது.

இலங்கைக்கோன் இராவணனைக் கட்டி சிறைப் படுத்தியவன் கார்த்தவீரியார்ச்சுனன். கார்த்தவீரியார்ச்

கனனை வென்று அழித்தவன் பரசுராமன். பரசுராமனின் விஷ்ணுதனுசை வளைத்து, ஒடித்து, அவனது தவத்தினை சிதறச் செய்தவன் இராமபிரான். பூரண அவதாரமான இராமனிடம் ஆவேச அவதார பரசுராமன் தோல்வியுறு கின்றான். இரு அவதாரமும் திருமாலின் அவதாரங்களே. அங்ஙனமிருக்க ஓர் அவதாரத்திடம் மற்றொரு அவதாரம் தோல்வியுறுவது ஏன்? எனில் இராமபிரானைச் சந்திக்கும் முன்பே பரசுராம அவதாரத்தின் நோக்கம் நிறைவேறிவிடு கிறது. ஆகவே, பரசுராம அவதார முடிவில் இராமன்—பரசு ராமன் சந்திப்பு நிகழ்கிறது. பூரண அவதாரமான இராம அவதாரத்திடம் தனது சக்தியை அளித்துவிட்டு, பரசுராம அவதாரம் சென்றுவிடுகிறது; முடிவடைந்துவிடுகிறது.

பரசுராமர் இராமரை எதிர்த்து, அவரிடம் தோற்று தன் தவத்தினை இராமருக்குத் தாரைவார்த்து அளித்து சென்றதை குலசேகரர் தன் பெருமாள் திருமொழியில் இரு இடங்களில் குறிப்பிட்டுள்ளார்.

முன்னொருநாள் மழுவாளி சிலைவாங்கி
அவன்தவத்தை முற்றும் செற்றாய்[32]
......மழுவா ளேந்தி
வெவ்வரிநற் சிலைவாங்கி கொண்டு[33]

### 4.5.1.4. இராம அவதாரம்

குலசேகராழ்வார் தம் பாசுரங்களில் குறிப்பிட்டுள்ள திருமாலின் அவதாரங்களில் இராம அவதாரம் மிகவும் சிறப்பிடம் பெறுகிறது. தன் பாசுரங்களில் எட்டு, ஒன்பது, பத்தாம் திருமொழிப் பாசுரங்கள் முழுவதிலும் இராம அவதாரச் சிறப்புக்களைப் பேசுகின்றார் ஆழ்வார்.

திருமாலாகிய பரம்பொருள் இராம அவதாரத்தில் சங்கு, சக்கரம் இன்றிக் கோதண்டமாகிய வில்லுடன் காட்சி தருகிறது. இராமன் என்ற பெயரில் நிகழும் அவதாரங்கள் மூன்றாக இருப்பினும், இராமன் என்பது சிறப்பாக சீதா இராமனையே குறிக்கும்.

தருமம் அழிந்து அதருமம் தலைதூக்கும் நேரத்தில் தருமத்தை நிலைநாட்ட திருமால் இராமராக அவதாரம் செய்தார். இவ்வவதார நோக்கத்தினை, குலசேகராழ்வார்,

மலையதனால் அணைகட்டி மதிளிலங்கை
யழித்தவனே![83]
வளையவொரு சிலையதனால் மதிளிலங்கை
யழித்தவனே![84]

என்று குறிப்பிடுவர்.

## இராமன்—சொல்விளக்கம்

'நாராயணா' என்னும் வார்த்தையிலுள்ள 'ரா'வும், 'நமசிவாய' என்ற வார்த்தையிலுள்ள 'ம'வும் சேர்ந்து 'ராம' என்ற வார்த்தை உருவானதாகக் கூறுவர்.[85]

'ராம' என்ற சொல் 'ரம்மியம்' என்ற சொல்லினின்று தோன்றியதாகும். ரம்மியம் என்ற சொல்லுக்கு சந்தோஷம், அழகு, திருப்தி என்று பொருள். ஆக, 'ராமன்' என்பவன் உயிர்களுக்கு மகிழ்வைத் தருபவன், உயிர்களை மகிழ்விப்பவன், ஐம்புலன்களுக்கு இனிமைத் தருபவன் எனத் தெளியலாம்.[86]

## இராமநாமப் பெருமை

சாதாரண ஓர் வேடனாக இருந்த வால்மீகி மராமரத்தின் பெயரினை உச்சரித்து, இராமபக்தராகி, வால்மீகி இராமாயணம் படைத்த வரலாறு இராம நாமத்தின் பெருமையைப் பறைசாற்றுவதாக விளங்குகின்றது. அனுமன் கடல்தாண்டி இலங்கைக்குச் சென்றது அவனது இராமபக்தியினாலும், இராமநாம மகிமையினாலுமாகும். கம்பரும் இராமநாமப் பெருமையை பின்வருமாறு உரைக்கின்றார்.

மும்மைசால் உலகுக்கெல்லாம் மூலமந்திரத்தை ஒக்கும்
இம்மையே எழுமை நோய்க்குமருந்தினை இராமஎன்னும்
செம்மை சேர்நாமம்[87]

## பெருமாள் திருமொழியில் இராம அவதாரம்

பெருமாளாகிய இராமபிரானிடத்து பக்தி செலுத்துவதில் பித்தரானவர் குலசேகராழ்வார். அவர்தம் பெருமாள் திருமொழியில் இராம அவதாரமே பரக்க பேசப்படுவதோடு, இராமவதார நிகழ்ச்சிகள் முழுதும் பாடப்பெற்றுள்ளன.

மராமரம் ஏழினைச் செற்றது, இராவணனை அழித்தது முதலான ஒருசில நிகழ்ச்சிகள் பெருமாள் திருமொழி இரண்டாம் திருமொழியில் கூறப்பட்டுள்ளன.

பெருமாள் திருமொழி—எட்டாம் திருமொழி, ஒன்பதாம் திருமொழிகளில் இராம அவதார நிகழ்ச்சிகள் பல கூறப்பெற்றுள்ளன. பத்தாம் திருமொழி முழுவதும் இராமாயணத்தின் சுருக்கமாக விளங்குகிறது.

## ஏழு மராமரம் செற்றது

இராமனின் வீரத்தின்மேல் ஐயப்பட்ட சுக்கிரீவனுக்குத் தன் வீரத்தை உணர்த்த இராமபிரான் வெவ்வேறு திக்குகளில் இருந்த ஏழுமராமரங்களை ஒரே வில்லினால் சாய்த்துவிட்டார் என்பது வரலாறு. இந்நிகழ்ச்சியை குலசேகராழ்வார்,

> ......சுடர் வாளியால்
> நீடுமாமரம் செற்றதும்[88]

என்று குறிப்பிடுவர்.

## இராவணனை அழித்தது

பிறன்மனை நயந்த இராவணனை அழித்து சீதையை மீட்டான் இராமபிரான். இந்நிகழ்ச்சியை ஆழ்வார் தம் பெருமாள் திருமொழியில் ஒருசில இடங்களில் குறிப்பிட்டுச் செல்கிறார்.[89] சான்றாக,

குரைகடலை யடலம்பால் மறுக வெய்து
குலைகட்டி மறுகரையை யதனா லேறி
எறிநெடுவே லரக்கரொடு மிலங்கை
வேந்தன் இன்னுயிர் கொண்டு[30]

*என்று பாசுரத்தைக் கூறலாம்.*

**தாடகையை அழித்தது**

*இராமபிரான் தாடகை முதலான அரக்கர் குலத்தோரை அழித்து விசுவாமித்திரன் யாகம் காத்த நிகழ்ச்சி பற்றிய குறிப்புக்கள் பெருமாள் திருமொழியில் காணப்படுகின்றன. அவை கீழ்வருமாறு :*

திண்டிறலாள் தாடகைதன் உரமுருவச் சிலைவளைத்தாய்[31]
வந்தெதிர்ந்த தாடகைதன் னுரத்தை கீறி வருகுருதி
பொழிதரவன் கணையொன் றேவி
மந்திரம்கொள் மறைமுனிவன் வேள்வி காத்து வல்லரக்க
ருயிருண்ட மைந்தன்[32]

**சீதையை மணந்ததும் பரசுராமரை வென்றதும்**

*விசுவாமித்திரனது யாகம் பூர்த்தியடைய உதவியருள் கின்றான் இராமபிரான். பின் முனிவருடன் மிதிலைக்குச் செல்கின்றான். சிவ தனுசை வளைத்து, சீதையை மணந்து, வரும்வழியில் பரசுராமனால் எதிர்கொள்ளப்பட்டு அவனது விஷ்ணுதனுசை ஒடிக்கிறான்; பரசுராமனின் தவவலிமையை சிதறச்செய்கிறான். இது இராம அவதாரத்தில் நிகழும் ஒரு நிகழ்ச்சி. இந் நிகழ்ச்சியை ஆழ்வார் கீழ்வருமாறு கூறிச் செல்கிறார்.*

செவ்வரிநற் கருநெடுங்கண் சீதைக் காகிச்
சினவிடையோன் சிலையிறுத்து மழுவா ளேந்தி
வெவ்வரிநற் சிலைவாங்கி வென்றி கொண்டு[33],

முன்னொருநாள் மழுவாளி சிலைவாங்கி
அவன்தவத்தை முற்றும் செற்றாய்[34].

இவ்வாறே. இராமபிரான் நாடு துறந்து காடேகிய செய்தி, குகனைச் சந்தித்தது, பரதனுக்கு பாதுகமளித்தது, சூர்ப்பனகையின் மூக்கறுத்தது, வாலியை வதைத்தது ஆகிய செய்திகளையும் அழகுபடச் சொல்லிப்போகிறார் ஆழ்வார்.[35]

...மிதிலைச் செல்வி உலகுய்யத் திருவயிறு வாய்த்த மக்கள்
செம்பவளத் திரள்வாய்த்தன் சரிதை கேட்டான்[36].

என்று இராமபிரான் தன்கதையைத் தன் பிள்ளைகளான லவகுசர்களின் வாயிலாகக் கேட்டறிந்ததைக் கூறுகிறார் ஆழ்வார்.

சம்புகனாகிய சூத்திரனை இராமபிரான் கொன்றது, செழுமறையோன் உயிர்மீட்டது, துருவாசமுனிவரின் சாபத்தினால் இலக்குமனனைப் பிரிந்தது, தன் சோதிக்கு எழுந்தருளுமுன் அயோத்தியிலிருந்த சரஅசரங்களை பரமபதத்திற்கு அனுப்பியது[37] முதலான இராம அவதார நிகழ்ச்சிகள் பெருமாள் திருமொழியில் குறிப்பிடப் பெற்றுள்ளன.

### 4.5.1.5. கிருஷ்ண அவதாரம்

திருமாலின் தசாவதாரங்களுள் ஒன்பதாவது அவதாரம் கிருஷ்ணாவதாரமாகும். இவ்வவதாரம் கம்சன் முதலான அரக்கர்களை அழித்து பகவத்கீதையினை தந்து மானிடரை உய்விக்கும் சிறந்த அவதாரமாகும்.

கிருஷ்ணன் என்பது வடமொழிச் சொல்லாகும். இச் சொல்லுக்குக் கருநிறமுடையவன் என்பது பொருள்.

சீவாத்மாக்களுக்குக் கண்ணாக இருந்து உய்விப்பவனாதலால் எம்பெருமான் "கண்ணன்" என்றழைக்கப்படுகிறான். கண்ணன் என்பதற்கு "கருமை நிறமுடையவன்" என்றும் பொருள்கொள்ளலாம்.[38]

குலசேகரர் தன் பெருமாள் திருமொழியில் பூதனையின் உயிர்குடித்தது, கேசி என்னும் அசுரனை கண்ணபிரான் அழித்தது, கோவர்த்தனகிரியைக் குடையாகப் பிடித்தது, கன்றினால் விளவெறிந்தது, காளியன் தலைமிதித்தது, நப்பின்னையை மணப்பதற்காக எருதுகள் ஏழினை அடக்கியது முதலான நிகழ்ச்சிகளை சுவைபடக் கூறிச் செல்கிறார்.

## பூதனையின் உயிர்குடித்தது

கண்ணனைக் கொல்வதற்காக கம்சனால் ஏவப் பட்டவள் பூதகி கண்ணனாகிய குழந்தைக்கு முலைப்பால் தருவதன்மூலம் அவனைக் கொல்ல சதிசெய்திருந்தாள். கண்ணனோ பாலொடு அவளது உயிரையும் உறிஞ்சி அவளை விண்ணுலகிற்கு அனுப்புகிறான். கண்ணனின் அவதார லீலைகளுள் இதுவுமொன்று. இந்நிகழ்ச்சியை குலசேகரர்,

...வன் பேய்முலை
உண்ட வாய்ன்தன்.[39]

தாய்முலைப் பாலி லமுதிருக்கத்
தவழ்ந்து தளர்நடை யிட்டுச்சென்று
பேய்முலை வாய்வைத்து நஞ்சையுண்டு
பித்தனென் றேபிற ரேசநின்றாய்[40]

வஞ்ச மேவிய நெஞ்சுடைப் பேய்ச்சி
வரண்டு நார்நரம் பெழக்கரிந்துக்க

நஞ்ச மார்தரு சுழிமுலை அந்தோ
சுவைத்து நீயருள் செய்து வளர்ந்தாய்.[41]

என்று கூறுவர்.

## குன்றினால் குடைகவித்தது

ஆண்டுதோறும் மழை நன்கு பொழிந்து உயிர்கள் சிறப்புடன் வாழ ஆயர்கள் இந்திரனுக்கு வேள்வி செய்து

வந்தனர். அதைத் தடுத்து, கோவர்த்தன மலைக்கே ஆயர்களை விழா எடுக்கும்படி செய்தான் கண்ணபெருமான். இதனால் கோபமுற்ற இந்திரன் ஊழிக்கால வெள்ளமென மழையைப் பொழியச்செய்து, கண்ணனுடன் ஆயர்களைப் பழி வாங்க நினைத்தான். ஆனால் கண்ணனாகிய பரம் பொருளோ கோவர்த்தனமலையையே குடையாகப் பிடித்து, ஆயர்களை காத்தான். இந் நிகழ்ச்சியைக் குலசேகராழ்வார்,

குன்றி னால்குடை கவித்ததும்[42]

......வன் குன்ற மேந்தி
ஆவினையன் றுய்யக்கொண்ட வாய ரேற்றை[43]

என்று பாடுவர்.

### காளியனை அடக்கி அருளியது

யமுனை நதிக்கரையில் இருந்த மடுவில் தன் குடும்பத்துடன் வாழ்ந்துவந்த "காளிங்கன்" என்னும் நச்சுப்பாம்பின் ஆணவத்தை அடக்கி அனைத்து உயிர்களையும் மகிழ்வித்தான் கண்ணபிரான். கண்ணனின் கட்டளைப்படி காளிங்கனும் தன் குடும்பத்துடன் கடலில் சென்று வாழலாயிற்று.

காலால் காளி யன்தலை மிதித்ததும்[44]

போரர வீர்த்தகோன்[45]

என்று ஆழ்வார் இந்நிகழ்ச்சியைக் குறிப்பிடுவர்.

### ஏறடர்த்தது

நப்பின்னை பிராட்டியை மணப்பதற்காக கண்ணன் முரட்டுத்தனமாக வலிமைபொருந்திய ஏழு எருதுகளை வென்று அடக்கினான். கண்ணனவதார நிகழ்ச்சிகளுள் இதுவுமொன்று. மிக்க கோபத்துடன் கூடியதான முழக்கத்தையுடைய, ஏழுகாளைகளின் கருத்துக்களை முறித்தவன்;[46] ஏழு எருதுகளையும் வென்றவன்[47] என்று ஆழ்வார் இந்நிகழ்ச்சியைப் பாடுவர்,

**கேசி என்னும் அசுரனை அழித்தது, கன்றினால் விளவெறிந்தது, ஆநிரை மேய்த்தது**

தன்னைக் கொல்லவந்த கேசி என்னும் அசுரனின் வாயைக் கிழித்து, அவனை அழித்து அருள் செய்தான் கண்ணன். இதனை, குலசேகராழ்வார்,

மாவினைவாய் பிளந்துகந்த மாலை.[48]

என்று குறிப்பிடுவர்.

இவ்வாறே, கன்றினால் விளவெறிந்தது, ஆநிரை மேய்த்தது, கம்சனை வதைத்து அழித்தது, குவலயாபீடமென்னும் யானையை அழித்தது[49] முதலிய கண்ணவதார நிகழ்ச்சிகளைச் சுவை ததும்ப சொல்லிச்செல்கிறார் ஆழ்வார்.

### 4.5.2. அர்ச்சைய அவதாரம்

விரும்பினவர் விரும்பியபடிக்குக் கோயில்களிலும், வீடுகளிலும் காணப்படும் எம்பிரானின் திருவுருவங்கள் அர்ச்சை நிலைவடிவங்களாகும். பெருமாள் திருமொழியில் இடம் பெறும் அர்ச்சைநிலை அவதாரங்கள், மொத்தம் ஐந்தாகும். அவை:

1. திருவரங்கத்தில் பள்ளிகொண்டுள்ள திருவரங்கநாதன்.

2. திருவேங்கடமலைமேல் நின்ற கோலத்துடன் காட்சிதரும் திருவேங்கடவன்.

3. திருவித்துவக்கோடுதனில் எழுந்தருளியுள்ள வித்துவக்கோட்டம்மான்.

4. திருக்கண்ணபுரத்தில் எழுந்தருளியிருக்கும் திருகண்ணபுரத்தான்.

5. தில்லைநகர்த் திருச்சித்ரக்கூடத்தில் வீற்றிருக்கும் கோவிந்தராசன்.[50]

எம்பெருமான் தன் நிலையிலிருந்து இறங்கி, திருவரங்கனாக, திருவேங்கடவனாக பல வடிவங்களில் எழுந்தருளி உலகினை உய்விக்கச் செய்வதால் இவ்வர்ச்சைநிலை வடிவங்களையும் அவதாரமாகக்கொள்ளலாம்.

### 4.5.3. வியூகநிலை

திருப்பாற்கடலுள் தேவியர் மூவருடன் வாசுதேவன், சங்கர்ஷணன், பிரத்யும்நன், அநிருத்தனாய் திருமால் எழுந்தருளியிருக்கும் வியூகநிலையும் அவதாரமாகவே கொள்ளப்படுகிறது. இந்நிலையினைக் குலசேகராழ்வார் ஆங்காங்கே ஒருசில இடங்களில் குறிப்பிட்டுக்காட்டுவார். அவை :

> மாலையுற்ற கடல்கிடந்தவன்[81]
>
> ஒண்பவள வேலை யுலவுதண் பாற்கடலுள்
> கண்டுயிலும் மாயோன்[82]
>
> பையர வின்னணைப் பள்ளியினாய்[83]

### 4.5.4. பரத்துவநிலை

நித்யசூரிகள் அனுபவிக்கும்படிக்கு வைகுந்தம் என்னும் திருநாடுதனில் பரவாசுதேவனாய் முழுமுதற்பொருள் எழுந்தருளியிருக்கும் நிலை பரத்துவநிலையென்று முன்பே கண்டோம். எம்பிரானின் திரு அவதார நிலையில் இதுவு மொன்றாகும். குலசேகராழ்வார் இதனை,

> ஆதியந்த மனந்தமற்புத மானவானவர் தம்பிரான்[84]

என்று குறிப்பிடுவர்.

மேலும், திருமால் தேவர்களுக்காக திருப்பாற்கடலைக் கடைந்து அமுதருளிச் செய்தது, ஆலினிலைப்பாலகனாய் ஏழுலகுண்டது ஆகிய புராணச் செய்திகளும் பெருமாள் திருமொழியில் பேசப்பெறுகின்றன.[85]

இவ்வாறு பெருமாள் திருமொழியில் திருமாலவதாரங்கள் சுவைததும்ப பேசப்பெறுகின்றன.

## குறிப்பெண் விளக்கம்

1. கழகப் புலவர் குழுவினர் (தொ. ஆ.), கழகத் தமிழ் அகராதி, மூன்றாம் பதிப்பு, (சென்னை, 1974), ப. 424.

2. பி. ஜெயா, 'மனிதனும் சமயமும்', இளவேனில், முதற்பதிப்பு, (சென்னை, 1972), ப. 939-4.

3. தர்மாரெட்டி, திருவள்ளுவர், வேமனர்—ஓர் ஒப்பாய்வு, முதற்பதிப்பு, (திருப்பதி, 1984), ப. 163.

4. மேற்படி ப. 163.

5. அ. ச. ஞானசம்பந்தன், 'தமிழும் சமயமும்', உலகத் தமிழ் மாநாடு விழாமலர், (சென்னை, 1968), ச-1.

6. எச். வைத்தியநாதன், வழிபாடும் சமயமும், முதற் பதிப்பு, (சென்னை, 1968), ப. 11.

7. அரங்கசீனிவாசன், வைணவத் தத்துவ ஞான அடிப்படைகள், ப. 10.

8. கழகப் புலவர் குழுவினர், கழகத்தமிழ் அகராதி, ப. 880. (தொ. ஆ.)

9. கீழாத்தூர் ஸ்ரீநிவாஸாச்சாரியர், ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாமஸ் தோத்ரம், ப. 21.

10. சொ. சற்குணம், சங்கக்கால இடைக்காலத் தமிழ் இலக்கியங்களில் திருமாலின் தசாவதாரங்கள்—ஓர் ஆய்வு, நவ. 1982. ப. 10.

11. அரங்கசீனிவாசன், வைணவ தத்துவஞான அடிப்படைகள், ப. 28-29.

12. சில ப்ரமாணங்கள் முப்பத்தெட்டு என்றும் சில முப்பத்தொன்பது என்றும் கூறுகின்றன.

—ஸ்ரீராமதேசிகாசார்யர், சில்லரை ரஹஸ்யங்கள் (முதற் பாகம்), ப. 538.

13. பி.பி. அண்ணங்கராசாரியார், ஆழ்வார்கள் வைபவம், ப. 3.

14. கலைக்களஞ்சியம், தொகுதி—1, முதற் பதிப்பு, (சென்னை, 1954), ப. 227.

15. சொ. சற்குணம், சங்ககால இடைக்காலத் தமிழ் இலக்கியங்களில் திருமாலின் தசாவதாரங்கள்—ஓர் ஆய்வு, ப. 58—59.

16. எஸ். நடராஜன், தசாவதார தத்துவங்கள், முதற் பதிப்பு, (சென்னை, 1979), ப 37.

17. பெரு. திரு. 2:3.

18. சொ. சற்குணம், சங்ககால இடைக்காலத் தமிழ் இலக்கியங்களில் திருமாலின் தசாவதாரங்கள்—ஓர் ஆய்வு, ப. 105-106.

19. பெரு. திரு. 2:3.

20. பி. எல். முத்துக்குமரன், தசாவதாரம், முதற்பதிப்பு (சென்னை, 1979), ப. 60-63.

21. பெரு. திரு. 9:9.

22. மேற்படி 10:3.

23. மேற்படி 8:8.

24. மேற்படி 8:9.

25. எஸ். நடராஜன், குருதத்துவம், ப. 75.

26. மேற்படி ப. 75.

27. இராமகாதை, (கம்பராமாயணச் சுருக்கம்) 1640.

28. பெரு. திரு. 2:2.

29. மேற்படி 2:3, 8:1, 8:9.

30. மேற்படி 10:7.

31. மேற்படி 8:2.

32. மேற்படி 10:2.

33. மேற்படி 10:3.

34. மேற்படி 9:9.

35. நாடு துறந்து காடேகல்.
பெரு. திரு. 8:5, 8:6, 9:5, 9:3, 9:7, 9:8, 9:9, 9:10.

35. குகனைச் சந்தித்தது பரதனுக்குப் பாதுகமளித்தது.
பெரு. திரு. 10:4.
சூர்ப்பனகையின் மூக்கறுத்தது பெரு. திரு. 10:5.
வாலியை வதம் செய்தது மேற்படி 8:7, 10:6.
சடாயுவுக்கு வீடளித்தது மேற்படி 10:6.

36. மேற்படி 10:8.

37. மேற்படி 10:9, 10:10.

38. பெரு. திரு. 7:1, 7:2, 7:3.

39. மேற்படி 3:4.

40. மேற்படி 6:4.

41. மேற்படி 7:10.

42. மேற்படி 7:9.

43. மேற்படி 1:4.

44. மேற்படி 7:9.

45. மேற்படி 2:5.

46. மேற்படி 2:5.

47. மேற்படி 2:3.

48. மேற்படி 1:4.

49. மேற்படி 7:9—கன்றினால் விளவெறிந்தது.
மேற்படி 2:2—ஆநிரை மேய்த்தது.
மேற்படி 7:10—கம்சனை வதைத்தது.
மேற்படி 5:5—குவலயாபீடமெனும் யானையை அழித்தது.

50. பெரு. திரு. முதல் திருமொழி, ஐந்தாம் திருமொழி, நான்காம் திருமொழி, எட்டாம் திருமொழி பத்தாம் திருமொழி.

51. மேற்படி 2:8.

52. மேற்படி 4:4.

53. மேற்படி 6:7.

54. மேற்படி 2:6.

55. மேற்படி 8:8—திருப்பாற்கடலைக் கடைந்து அமுதருளியது.
மேற்படி 8:7—ஆலினிலைப் பாலகனாய் அனைத்து உலகும் உண்டது.



## இயல் ஐந்து

# குலசேகரர் பாசுரங்களில் வைணவத் திருத்தலங்கள்

### 5.0. பெருமாள் திருமொழியில் இடம்பெறும் வைணவத் திருத்தலங்கள்

இவ்வியலில் தலம், தீர்த்தம், ஆலயம், மூர்த்தி விளக்கம், திருமாலுக்குரிய திருத்தலங்கள், பெருமாள் திருமொழியில் இடம்பெறும் வைணவத் திருத்தலங்கள் ஆகியன கூறப் பெறுகின்றன.

### 5.1.0. தலம், ஆலயம், மூர்த்தி, தீர்த்தம்—விளக்கம்

### 5.1.1. திருத்தலம் :

இறைவன் எங்கும் எதிலும் நிறைந்தவன். ஆயினும் மனிதப் பிறவியின் ஊனக்கண்களின் காட்சி அளவிற்காக மூர்த்திநிலையில் குறிப்பிட்ட சில இடங்களில் எழுந்தருளி யுள்ளான். அவை யாவும் திருத்தலங்கள் எனப் பெயர் பெறு கின்றன. ஆயினும் சிறப்பாக ஆழ்வார்களால் மங்களா சாசனம் செய்யப்பட்ட எம்பெருமானின் தலங்கள் திவ்ய தேசங்கள் எனப் பெயர் பெறுகின்றன.

திருத்தலங்களை ஸ்வயம்வ்யக்தம், ஸைத்தம், ஆர்ஷம், திவ்யம், மாநுஷம் என ஐந்து வகையாகப் பிரிப்பர். பிறர் ஸம்பந்தமின்றி எம்பெருமான் தானே வந்து அவதரித்த தலம் "ஸ்வயம்வ்யக்தம்" எனப்படும். ஸித்தர்களால் ஸ்தாபிக்கப்பட்டது "ஸைத்தம்" ஆகும். முனிவரால்

பிரதிஷ்டை செய்யப்பட்டது "ஆர்ஷம்". தேவர்களால் அமைக்கப்பட்டது "திவ்யம்". மானிடரால் நிர்மாணம் செய்யப்பட்டது "மாநுஷமாகும்"[1]. இவற்றுள் ஸ்வயம்வ்யக்தமே மிகவும் சிறந்தது. ஸ்ரீரங்கம், ஸ்ரீமுஷ்ணம், திருவேங்கடம், ஸாளக்ராமம், நைமிஸம், தோதாத்ரீ (வானமாமலை), புஷ்கரம், பத்ரீ ஆகிய எட்டு க்ஷேத்திரங்கள் ஸ்வயம்வ்யக்த க்ஷேத்திரங்களாகும்[2]. திருமாலின் நூற்றெட்டுத் திருப்பதிகளுள் மாநுஷ மொழிந்த மற்றைய மூவகை அர்ச்சையினைச் சேர்ந்தவை என்றும், மூவகை அர்ச்சையிற் சேர்ந்த திருப்பதிகளுள்ளும் சில ஆழ்வார்களது மங்களாசாசனம் பெற்ற நூற்றெட்டுத் திருப்பதிகளிற் சேர்ந்தனவாகாமல், புராண ஸ்தலங்களென்று சிறப்பித்துக் கூறப்படுகின்றன.[3]

தலவழிபாடும், இறைவழிபாட்டுக்கு ஒப்பானதாகவே கருதப்படுகின்றது. தலயாத்திரை செய்வது, இறையருள் பெறுவது அனைத்துச் சமயங்களில் காணப்பெறும் பொது நெறியாகத் திகழ்கின்றது. அதே நேரத்தில் இறையருள் பெறுவதற்குத் தலயாத்திரைப் போவதால் மட்டும் பயனில்லை; உலகப் பொருள்கள்மேல் பற்றற்ற, தூய்மை யான மனமும் தேவை என்பதை இந்துசமயம் வலியுறுத்து கின்றது.[4]

## 5.1.2. ஆலயம்

ஆலயம் என்பது எம்பிரான் எழுந்தருளியிருக்கும் புனித இடமாகும். ஆலயம் என்பதை ஆ+லயம் எனப் பிரித்து ஆன்மாக்கள் தம்மை மறந்து ஒன்றிவிடும் புனிதமான இடம் எனப் பொருள்கொள்ளலாம். இறைவன் மூர்த்தி நிலையில் தங்கியிருக்கும் ஆலயங்கள் உள்ள இடங்கள் திருத்தலங் களாகச் சிறப்புப் பெற்றன. இந்த ஆலயங்கள் பண்டு முதல் இன்றுவரை மனிதனின் மனஅமைதிக்கு இருப்பிடங்களாக இருந்துவருகின்றன.

திருத்தலங்களில் உள்ள ஆலயங்களில் மூர்த்தி, தீர்த்தம் ஆகியன காணப்படுகின்றன.

### 5.1.3. மூர்த்தி

மூர்த்தி என்பது இறைவனின் பல்வேறு உலகக்காட்சி வடிவங்களாகும்; மேலும் அது சமூகம் இறைவனுக்குத் தம்தம் நோக்கில் அமைத்துக்கொண்ட வடிவமாகும். எப்பொருளால் இறைவன் திருவுருவை அமைத்து வழிபட்டாலும் அப்பொருளில் இறைவனின் ஆற்றல் வந்து தங்கும்[5] என்பது தத்துவக் கருத்தாகும். மக்கள் இறைவனுக்குப் பல்வேறு உருவம் கொடுத்து வணங்கினர். இவற்றுள் வைணவர் இறைவனுக்குத் ''திருமால்'' என்ற பெயர் சூட்டி, சங்கு, சக்கரத்தோடு கூடிய வடிவம் அளித்து வழிபட்டனர். இவ்வாறே மற்ற சமயத்தாரும் அவரவர் எண்ணத்தினடிப்படையில் இறைவனுக்குப் பல்வேறு வடிவம் கொடுத்தனர்.

### 5.1.4. தீர்த்தம்

தீர்த்தம் என்பது இறைவனின் திருக்கோயில்களில் காணப்படும் நீர்நிலைகளாகும். தெய்வத்திற்கு எவ்வளவு ஆற்றல் உண்டோ அவ்வளவு ஆற்றல் தீர்த்தங்களுக்கும் உண்டு என்பது இந்துமத நம்பிக்கையாகும்.[6] இத் தீர்த்தங்கள் புண்ணிய நீர்நிலைகள் எனப் போற்றி வழங்கப்படுகின்றன. மேலும் இறைவனை வழிபடுபவரை அதற்குத் தகுதியாகச் செய்யும் சிறப்பினை இவை பெறுகின்றன.

## 5.2. திருமாலுக்குரிய திருத்தலங்கள்

திருமாலுக்குரிய வைணவத் திருத்தலங்கள் நூற்றெட்டாகும்.

ஈரிருபதாஞ்சோழ மீரொன்பதாம் பாண்டி
யோர்பதிமூன்றாமலைநா டோரிரண்டாஞ் சீர்நடுநா

டாறோடீரெட்டுத் தொண்டயவ் வடநாடாறிரண்டு
கூறுதிரு நாடொன்றாக் கொள்[7]

சோழநாட்டுத் திருப்பதிகள் நாற்பது. பாண்டி நாட்டுத் திருப்பதிகள் பதினெட்டு. மலைநாட்டுத் திருப்பதிகள் பதின்மூன்று. நடுநாட்டுத் திருப்பதிகள் இரண்டு. தொண்டைநாட்டுத் திருப்பதிகள் இருபத்திரண்டு. வடநாட்டுத் திருப்பதிகள் பதின்மூன்று ஆக வைணவத் திருத்தலங்கள் நூற்றெட்டாகும்.

## 5.3.0. பெருமாள் திருமொழியில் இடம்பெறும் திருமாலின் திருத்தலங்கள்

பெருமாள் திருமொழியில் இடம்பெறும் திருமாலின் திருத்தலங்கள் மொத்தம் எட்டாகும். அவை திருவரங்கம், திருப்பாற்கடல், திருவேங்கடம், திருவித்துவக்கோடு, திருக்கண்ணபுரம், திருவாலி, திருஅயோத்தி, தில்லைத்திருச்சித்ரக்கூடம் ஆகியன.

### 5.3.1.0. திருவரங்கம்

ஈண்டு திருவரங்கம் விளக்கம், சிறப்புக்கள், பெருமாள் திருமொழியில் திருவரங்கம் பெறும் இடம் ஆகியன கூறப் பெறுகின்றன.

### 5.3.1.1. திருவரங்கம்—விளக்கம்

இத் திருத்தலம் திருமால் திருவுள்ளம் உவந்து தங்கிய இடமாதலால் திருவரங்கம் எனப் பெயர் பெற்றது. "திருமகளார் திருநிருத்தஞ் செய்யுமிடமாயிருத்தலாலும், ஸ்ரீவைஷ்ணவர்களுடைய திருவுக்குக் கூத்துப் பயிலிடமாயிருத்தலாலும், ஆற்றிடைக்குறையாதலாலும் திருவரங்கம் எனப் பெயர் பெற்றது."[8] திருவரங்கம் என்பதில் திரு என்பது சிறப்புக் கருதி வழங்கப்படும் சொல்லாகும்; அரங்கத்திற்கு அடை மொழியாகும். அரங்கம் என்ற சொல்லுக்கு

அம்பலம், சபை என்று பொருள். சைவர்களுக்குத் தில்லை விளங்குவதுபோல் வைணவர்களுக்கு அரங்கம் விளங்கு கிறது. மேலும் இத்தலம் திருமாலின் திருப்பதிகள் நூற்றெட்டினுள் தலைமையானது. சோழநாட்டுத் திருப்பதிகள் நாற்பதில் முக்கியமானது; பூலோக வைகுண்டம், போகமண்டபம் என்று சிறப்பித்து வழங்கக் கூடியது; ஸ்வயம்வ்யக்த க்ஷேத்திரம் எட்டினுள் ஒன்று.

### 5.3.1.2. சிறப்புக்கள்

திருவரங்கநாதனை மதுரகவியாழ்வாரைத் தவிர மற்ற பதினோருஆழ்வார்களும் பாடி பரவியுள்ளனர். நாலாயிரத் திவ்வியப்பிரபந்தத்தில் பாடப்பட்ட தலங்களில் பாசுர எண்ணிக்கையில் முதலிடம் பெறுவது திருவரங்கமாகும். திருவரங்கம் பற்றிப் பெரியாழ்வார் முப்பத்தைந்து பாசுரங் களும், ஆண்டாள் பத்து பாசுரங்களும், குலசேகராழ்வார் முப்பத்தோரு பாசுரங்களும், திருமழிசையாழ்வார் பதினான்கு பாசுரங்களும் தொண்டரடிப்பொடியாழ்வார் ஐம்பத்தைந்து பாசுரங்களும், திருப்பாணாழ்வார் பத்து பாசுரங்களும், திருமங்கையாழ்வார் ஒரு பாசுரமும், பூதத் தாழ்வார் நான்கு பாசுரங்களும், பேயாழ்வார் இரண்டு பாசுரங்களும், நம்மாழ்வார் பன்னிரண்டு பாசுரங்களும் பாடியுள்ளனர்.

திவ்வியகவிப் பிள்ளைப்பெருமாள் ஐயங்கார் திருவரங்கம் பற்றி பாடிச் சிறப்பித்த நூல்கள் பல. அவை திருவரங்கக்கலம்பகம், திருவரங்கத்தந்தாதி, திருவரங்கத்து மாலை, ஸ்ரீரங்கநாயகர் ஊசல் ஆகியன. பெரியநம்பிகள், பட்டர்பெருமான், பிள்ளைலோகாச்சாரியார், வடக்குத் திருவீதிப்பிள்ளை ஆகியோர் இத் திருத்தலத்தில் பிறந்தவர் களாவர். கம்பன் தன் இராமகாதையை அரங்கேற்றிய பெருமையும் இத் திருத்தலத்திற்குண்டு. இத் தலத்தின் சிறப்பினை—பெருமையைப் பேசக்கூடிய தகுதி நான்முகன்

ஒருவனுக்கே உண்டு என்கிறது நூற்றெட்டுத் திருப்பதியந்தாதி.

இவ்வாறு திருவரங்கத்தின் சிறப்புக்கள் பேசப்படுகின்றன.

### 5.3.1.3. பெருமாள்திருமொழியில் திருவரங்கம்

குலசேராழ்வார் முப்பத்தோரு பாசுரங்களால் திருவரங்கத்தையும், திருவரங்கனையும் நெஞ்சுருகப் பாடிப்பரவுகிறார். பெருமாள் திருமொழியின் முதல் மூன்று திருமொழிகளும் திருவரங்கநாதனை மங்களா சாசனம் செய்வதாக அமைந்துள்ளன. பெருமாள்திருமொழியில் முதல் திருமொழியில் மட்டும் திருவரங்கத்தின் இயற்கைவளம், செல்வவளம், கல்விநலம் ஆகியன அழகுபடக் கூறப்பட்டுள்ளன.

பெருமாள்திருமொழியில் திருவரங்கத்தின் இயற்கை எழில் பின்வருமாறு சுவைபடக் கூறப்பெற்றுள்ளது. தேன் மிகுந்த புஷ்பங்கள் நிறைந்த சோலைகளை உடையது திருவரங்கம்,[10] காவேரி நதியினால் சூழப்பெற்று அழகு பெற்றிருப்பது;[11] மீன்கள் நிரம்பப்பெற்ற வயல்களாலும், சோலைகளாலும் சூழப்பட்டது.[12]

திருவரங்கநாதன் கோயில் மதிளை அரணாகப் பெற்றிருப்பதை ஆழ்வார் பின்வருமாறு குறிப்பிடுகிறார்.

கடியரங்கத் தரணையில்[13]

மதிளரங்கத் தரவணையில்[14]

மேலும் மணிமாடமாளிகைகளையும் மிகுந்த செல்வங்களையுமுடையது திருவரங்கம்[15] என்று அரங்கத்தின் செல்வ வளத்தினைச் சுட்டிக்காட்டுகிறார்.

இவ்வுலக பந்தங்களை உதறிவிட்டு திருமாலுக்காக மையல் கொண்டொழிந்த எம்பெருமான் பக்தர்கள் நித்யவாசம் செய்யும் தலம் திருவரங்கம். இதனை குலசேகரர்,

......பற்றற் றார்கள்

பயிலரங்கத் தரவணையில் பள்ளி கொள்ளும்[16]

எனக் குறிப்பிட்டுள்ளார்.

திருவரங்கநாதனைக் கண்டு அவன் பக்தர்கள் மெய் சிலிர்த்து, மயிர்க்கூச்செறிந்து, கண்ணீர்பொழிந்து பக்தி செய்து உருகுகின்றனர். அச்சமயம் அங்கு எழும் வாத்தியங் களின் பேரொலி கடலினது ஓசையைக் கடந்து ஒலிக்கின்றது. இத்தகைய சிறப்புடையது திருவரங்கம்[17] என்று அரங்கத்தின் பெருமையைப் பேசுகின்றார் ஆழ்வார்.

இவ்வாறு திருவரங்கம் பெருமாள் திருமொழியில் சிறப் பிடம் பெற்று விளங்குகிறது.

### 5.3.2. திருப்பாற்கடல்

எம்பெருமான் வாசுதேவ, சங்கிருஷ்ண, ப்ரத்யும்ன, அநிருத்தனாகப் பிரிந்து வியூகநிலையில் இவ்வுலகினைப் படைத்து, காத்து, அழிக்கும்—அரியதொரு செயலியற்றும் அற்புதத்தலமாகும். திருப்பாற் கடல். நூற்றெட்டுத் திருப்பதிகளுள் இத்தலமும் ஒன்றாகக் குறிப்பிடப் பட்டுள்ளது. இத்தலம், யோகிகளும், முனிவர்களும், அமரர் களும் இருந்த இடத்திலேயே இருந்து பரம்பொருளை எண்ணி வழிபாடு செய்யும் இடமாகும்.[18] இத்திருத்தலத் தில் எழுந்தருளியிருப்பவன் பாற்கடல்நாதன்; தாயார் கடல்மகள் ஆவள்.

இத் தலத்தைப் பற்றி நாலாயிரத்துள் காணப்பெறும் பாசுரங்கள் ஐம்பத்து ஒன்றாகும். அவற்றுள் குலசேகரர் பாடியது இருபாசுரங்களாகும்.

குலசேகரர் தமது பெருமாள் திருமொழியில் பல்வேறு பாசுரங்களில் இத் தலத்தைப் பாடிப் பரவியுள்ளார்.

மாலையுற்ற கடல்கிடந்தவன்[19]

பையர வின்னணைப் பள்ளியினாய்[20]

ஒண்பவள வேலை யுலவுதண் பாற்கடலுள்
கண்டுயிலும் மாயோன்[21]

என்று திருப்பாற்கடலில் எம்பெருமான் எழுந்தருளியிருக்கும் நிலையினைக் கூறுகிறார் ஆழ்வார்.

## 5.3.3.0. திருவேங்கடம்

திருவேங்கடம் பெயர்க்காரணம், அமைப்பு, திருவேங்கடவன் தோற்றம், வைணவத்திருத்தலம் வேங்கடம், தலவரலாறு, பெருமாள் திருமொழியில் திருவேங்கடம் முதலிய செய்திகள் இங்கு விளக்கப்பெறுகின்றன.

## 5.3.3.1. பெயர்க்காரணம்

திருவேங்கடத்தில் திருமால் திருவேங்கடவனாக எழுந்தருளி காட்சி தருகின்றான். ஸ்வயம்வ்யக்த திருத்தலங்களுள் இத்தலமும் ஒன்று.

வேங்கடம் என்ற சொல்லுக்கு இரு பொருள்கள் உள. ஒன்று வேம் - பாவங்கள். கடம் - எரித்தல். உயிர்களின் பாவங்களை எரித்து உய்விக்கும் திருத்தலம் என்பதாகும்.[22] மற்றொன்று வேம் - அழிவின்மை. கடம் - ஐசுவரியம். தன்னை அடைந்தாருக்கு அழிவற்ற ஐசுவரியங்களைத் தருவது என்பதாகும்.[23]

"சென்றுசேர் திருவேங்கடமலை; தொழுதெழு வேங்கடவனை; உன்வினைகள் நீங்கிவிடும்"[24] என்ற நம்மாழ்வார் வாக்கும்.

விளைச்சுடரை நந்துவிக்கும்
வேங்கடமே வானோர்
மனச்சுடரைத்தூண்டும் மலை[35]

என்ற பொய்கையாழ்வார் வாக்கும் வேங்கடமென்பது பாவத்தை எரித்து, உய்விக்கும் திருத்தலம் என்பதையே உணர்த்துகின்றது. திருமலை என்பது நித்யசூரியன் விண்ணுலகத்திலிருந்து நேராக மலையிலுள்ள நாதனைத் தொழும் தலத்தினைக் குறிக்கின்றது.[36] இராமாவதாரத்தின் போது சூர்ப்பனகையாக இருந்த உயிர், மறுபிறவியில் அந்தணனாகப் பிறந்து, மனைவியைப் பிரிந்தது முதலான எண்ணற்ற பாவங்களைச் செய்து திருவேங்கடம் அடைந்த நிலையில் தன் பாவங்கள் எரிந்து சாம்பலாக உய்ந்து மகிழ்ந்தது என்பது வரலாறு.[37] ஆதலால் வேங்கடம் என்பது உயிர்களின் எண்ணற்ற பாவங்களை நீக்கி அவ்வுயிர்கள் உய்ந்து மகிழ அனைத்து வளங்களையும் கொடுக்கும் திருத்தலம் எனத் தெளியலாம்.

மலைகளில் புனிதமும் புகழும் பெற்ற மலைகள் பல உண்டு. ஆயினும் "திரு" என்ற அடைமொழியுடன் சிறப்பித்து வழங்கப்படுவது வேங்கடவனது திருமலையே யாகும்.[38]

### 5.3.3.2. அமைப்பு

திருவேங்கடம் ஆந்திரப்பிரதேசத்தில் சித்தூர் மாவட்டத்தில் சந்திரகிரி தாலுக்காவில் அமைந்துள்ளது. இத்தலம் திருமலை, திருச்சானூர், திருப்பதி என்று மூன்று பிரிவுகளாகத் திகழ்கிறது.

இத் திருவேங்கடமலை, சேஷாத்ரி, அஞ்சனாத்ரி, நாராயணாத்ரி, விருஷாத்ரி, கருடாத்ரி, வேங்கடாத்ரி, திருமலை ஆகிய ஏழுமலைகளின் தொடராக அமைந்துள்ளது. மேலும் இத்திருமலை, முன்னூறு மைல் நீளமும், முப்பது மைல் அகலமும் கொண்டு விளங்குகிறது.

### 5.3.3.3. திருவேங்கடவன் தோற்றம்

திருவேங்கடமலையில் எம்பெருமான் திருவேங்கடவனாக நின்ற திருக்கோலத்தில் எழுந்தருளியுள்ளான்; கிழக்கே நோக்கி திருமுகமண்டலம் அமைந்துள்ளது. திருவேங்கடவனாகிய திருவழகன் சங்கு, சக்கரம் முதலிய பஞ்சாயுதங்களையும், தாழ்சடையையும், நீள்முடியையும், நாகாபரணம் என்னும் அணியையும், பொன்நாணையும் கொண்டு, அலர்மேல் மங்கை உறைமார்பனாகக் காட்சிதருகின்றான். இதனைப் பேயாழ்வார்,

தாழ்சடையும் நீள்முடியும் ஒண்மழுவும் சக்கரமும்
சூழரவும் பொன்நாணும் தோன்றுமால்,—சூழும்
திரண்டருவி பாயும் திருமலைமேல் எந்தைக்கு
இரண்டுருவு மொன்றாய் இசைந்து[29]

என்று குறிப்பிட்டுள்ளார்.

திருமலையில் எழுந்தருளியுள்ள வேங்கடவனது திருக்கரங்களுள் ஒன்று அவனது பாதத்தை நோக்கியும், மற்றொன்று அவனது தொடையின்மீதும் அமைந்துள்ளது. சீவாத்மாக்களாகிய உயிர்களைத் தன் பாதத்தில் சரணடைந்து உய்யும்படி உணர்த்துவதாகவும், தன்னை அடைந்தார்க்கு சகல ஐசுவரியமும் தரும்பொருட்டு, "என்னை அடைவதற்கு உள்ள தடைகள் முழங்கால் அளவினதே; அவற்றை எளிதில் கடந்துவிடலாம்" என்று உரைத்து ஊக்கப்படுத்துவதாகவும் அவரது இத் திருத்தோற்றம் அமைந்துள்ளது எனலாம்.

### 5.3.3.4. வைணவத் திருத்தலம் வேங்கடம்

வேங்கடவனைத் திருமாலென்றும், இத்தலத்தை விஷ்ணுதலம் என்றும் வைணவர் அறுதியிட்டுக் கூறுவர். இக் கருத்தையே வேதம், இதிஹாசம், புராணம், ஸ்ரீபாஞ்சராத்ரம், திவ்வியப்பிரபந்தம் முதலிய கிரந்தங்கள் சிறப்பித்துக் கூறுகின்றன[30]. தாழ்சடை, சூழரவு, ஒண்மழுவுடன்

திருவேங்கடவன் காட்சி தருவதோடு, வில்வ அர்ச்சையை ஏற்றுத் திகழ்கிறார். இதனால் திருமலைத் தெய்வம் "சிவபெருமான்" என்று சைவர்கள் கொண்டாடினர்.

எம்பெருமானின் கிரீடத்தில் சக்கரமும் காணப்படுவதோடு கோவிலின் வெளிப்பிரகாரங்களிலும் விமான நிலையத்திலும், நான்கு மூலைகளிலும் காணப்படுகின்றன. சாரதா நவராத்திரியின்போது திருமலையில் பிரம்மோற்சவம் நிகழ்கிறது. எனவே திருமலைத் தெய்வம் சக்தியே என்பர் தேவிபக்தர்.

பொதுவாக மலைமேல் உறைந்து அருள்பவன் முருகன். திருவேங்கடவன் மலைமேல் நின்றவண்ணம் காட்சி தருவதோடு, பாலாஜி என்ற பெயரையும் தாங்கி நிற்கின்றான். இதனால் திருமலைத் தெய்வம் பாலசுப்பிரமணியாகிய முருகப்பெருமான் என்பர் முருகபக்தர்.

மேற்கூறிய தெய்வங்களின் அத்தனை அம்சங்களும் நிறையப்பெற்று, படைத்து, காத்து, அழிக்கும் முழுமுதற் பொருளாய் சரணடைந்தோரை உய்விப்பவனாக வேங்கடவன் திருமலையில் காட்சிதருகின்றான். இராமாநுசர், திருவேங்கடவன் முன்பு சங்கு, சக்கரம் என்னும் வைணவச் சின்னங்களோடு, சிவச்சின்னங்களான சூலம், உடுக்கையினை வைக்க, வேங்கடவன் சங்குசக்கரம் தாங்கி காட்சித்தந்து விளங்கினான். இதனால் இராமாநுஜர் "வேங்கடவன் திருமாலே" என நிறுவி திருமலையினை வைணவத் திருத்தலமாக ஏற்கச்செய்தார்[11].

### 5.3.3.5. தலவரலாறு

நாராயணமுனிவர் என்னும் முனிவர் பிரம்மாவின் யோசனைப்படி திருவேங்கடத்தலத்தைத் தேர்ந்தெடுத்து தவம்செய்தார். திருமால் அவர்முன் தோன்றி "வேண்டும் வரம்கேள்" என்றதற்கு உலக மக்கள் அனைவரும் யோகம் செய்து உன்னைக் காணும் வலிமையற்றவர்கள். ஆதலால்

நீ இங்கேயே எழுந்தருளி அனைவர்க்கும் அருள்செய்ய வேண்டுமென வேண்டிக்கொண்டார் என்பது இத்தலம் பற்றிய வரலாறுகளில் ஒன்று[32].

பிருகுமுனிவர் மும்மூர்த்திகளுள் முதல் மூர்த்தி யார்? என்பதை அறியும்பொருட்டு பிரம்ம, சிவ, விஷ்ணு உலகம் சென்றதாயும் திருமாலை மார்பில் உதைத்து, ஆணவம் அழியப்பெற்று திருமாலே முதல் மூர்த்தி என அறிந்ததாயும் புராணங்கள் கூறுகின்றன. தானுறைந்திருக்கும் திருமார்பில் பிருகுமுனிவர் உதைத்ததால் மகாலட்சுமி கோபம் கொண்டு வேதனையுடன் திருமாலைப் பிரிந்து பூஉலகம் சென்றுவிட திருமால் திருமலையில் ஒரு புளிய மரத்தின் கீழுள்ள புற்றில் இடம்கொண்டார். சிவனும், பிரம்மனும் கன்றாகவும், பசுவாகவும் மாற, திருமகள் தான் இடைச்சியாக மாறி சந்திரகிரி மன்னனுக்கு பசுவையும், கன்றையும் விற்றாள். அப்பசு நாளும் புற்றின் கீழ் எழுந் தருளி இருக்கும் எம்பிரானுக்குப் பால் நினைந்தூட்டியது. இச்செய்தி அறிந்த இடையன் கோடரியால் பசுவைத் தாக்க, எம்பெருமான் அதைத் தடுத்து பசுவைக் காத்தருளி னார். குடிமகன் தவறு அரசனைச் சேரும் என்று கூறி திருமால் சந்திரகிரி மன்னனை பிசாசாக மாறும்படி சபித்தார். அம் மன்னன் மறுபிறவியில் ஆகாசராசனாகப் பிறக்க அவனது மகள் பத்மாவதியை ஸ்ரீநிவாசன் ஒரு கோடியே பதினான்கு இலட்சம் பொன் கடன் பெற்று திருக்கல்யாணம் செய்து, திருச்சானூரில் பத்மாவதியும், திருமார்பில் திருமகளும் உறையும்படி, திருவேங்கடவ னாகக் காட்சி அளிக்கிறார். இது திருவேங்கடம் பற்றிய தலவரலாறாகும்[33].

### 5.3.3.6. பெருமாள் திருமொழியில் திருவேங்கடம்

நாலாயிரத்தில் திருவேங்கடம் பற்றிய பாசுரங்கள் இருநூற்றுப் பதின்மூன்றாகும். அவற்றுள் குலசேகரர்பாடிய பாசுரங்கள் பதினொன்றாகும்,

குலசேகரரின் பெருமாள் திருமொழியில் நான்காம் திருமொழி திருவேங்கடவனைப் பற்றியும், திருமலையைப் பற்றியும் சிறப்பித்துப் பேசுகின்றது. குலசேகரரின் பாசுரங் களில் திருவேங்கடத்தின் சிறப்புகள் பின்வருமாறு கூறப் பெற்றுள்ளன.

வளைந்திருக்கின்றதான பாஞ்சசன்யமான திருச் சங்கினைத் தன் இடது திருக்கையிலே உடையவனான எம்பெருமான் எழுந்தருளியிருக்கும் வேங்கடம்.[84] சிவபெருமானும், பிரம்மனும், இந்திரனும் ஒருவர்க் கொருவர் நெருக்கியும் உள்ளே புகமுடியாமல் இருக்கின்ற நீண்ட வாசலை உடைய திருவேங்கடம்.[85]

எம்பெருமா னீசன் எழில்வேங் கடமலை[86]

ஒண்பவள வேலை யுலவுதன் பாற்கடலுள்
கண்துயிலும் மாயோன் கழலிணைகள் காண்பதற்கு
பண்பகரும் வண்டினங்கள் பண்பாடும் வேங்கடம்[87]

## 5.3.4. திருவித்துவக்கோடு

மலைநாட்டிலுள்ள பதிமூன்று வைணவத் தலங்களுள் திருவித்துவக்கோடும் ஒன்றாகும். குருவாயூருக்கு அருகில் சுமார் இருபது மைல் தூரத்தில் இத்தலம் அமைந்துள்ளது. இத் தலத்தில் எழுந்தருளியுள்ள வித்துவக்கோட்டம்மான், சிவனுக்குத் தன் ஆலயத்தில் இடம்தந்து சிவனுக்கடுத்து, பின்னே கிடந்த திருக்கோலத்தில் எழுந்தருளியுள்ளான். தெற்குநோக்கி திருமுகமண்டலம் அமைந்துள்ளது. இத் தலத் தில் எம்பெருமான் உய்யவந்த பெருமாளாகவும், தாயார் வித்துவக்கோட்டுவல்லியாகவும் காட்சி தருகின்றனர். இத் தலம் ஆழ்வார்களுள் குலசேகராழ்வாரால் மட்டுமே மங்களாசாசனம் செய்யப்பட்டுள்ளது.

குலசேகரர் தம் பெருமாள் திருமொழியில், ஐந்தாம் திருமொழியில் வித்துவக்கோட்டில் வீற்றிருக்கும்

எம்பெருமானினை தன் தெய்வமாக—தாயாகக் கொண்டு வித்துவக்கோட்டம்மா என்றழைத்துப் பரவசப்பட்டு உருகுகிறார். பெருமாள் திருமொழியில் ஐந்தாம் திருமொழி முழுவதும் சரணாகதித் தத்துவத்தின் சாரமாகவே விளங்குகிறது.

குலசேகரர் வித்துவக்கோட்டின் நீர்வளம், இயற்கை எழில், அரணமைப்பு ஆகியவற்றைத் தனது பாசுரங்களில் பின்வருமாறு கூறிச் செல்கிறார்.

**விரைகுழுவும் மலர்ப்பொழில்சூழ் வித்துவக்கோட்**
**டம்மானே![38]**

**விண்டோய் மதிள்புடைசூழ் வித்துவக்கோட் டம்மா![39]**

**மீன்நோக்கும் நீள்வயல்சூழ் வித்துவக்கோட் டம்மா![40]**

மின்னலைப் போல் ஒளிபொருந்திய சக்கராயுதத்தை உடையவனான எம்பெருமான் எழுந்தருளியுள்ள திருத்தலம் வித்துவக்கோடு[41] என்று வித்துவக்கோட்டம்மான் எழுந்தருளியிருக்கும் திருத்தலமாதலால் வித்துவக்கோடு பெருமை வாய்ந்தது என்பதை அழகுபடச் சுட்டிச்செல்கிறார்.

இவ்வாறு வித்துவக்கோடு பெருமாள் திருமொழியில் சிறந்த இடம் பெற்று விளங்குகிறது.

### 5.3.5. திருக்கண்ணபுரம்

இத் திருத்தலம் மாயூரம்—காரைக்குடி இருப்புப்பாதையில் உள்ள நன்னிலம் என்னும் இரயில் நிலையத்தில் இருந்து கிழக்கே ஐந்து கல் தொலைவில் அமைந்துள்ளது.

கிருஷ்ணாரண்ய க்ஷேத்திரம் என்றும், அஷ்டாக்ஷர மகாமந்திர சித்திக்ஷேத்திரம் என்றும் இத்தலம் பெயர் பெற்று விளங்குகிறது. திருவரங்கநாதனுக்கு இத்தலம் கீழைவீடாய் இருக்கிறது. மகரிஷிகள் பலர் இங்கு விரும்பி தவம் செய்ததாகப் புராணங்கள் கூறுகின்றன. முக்திதரும் தலங்களில் இதுவும் ஒன்றாகக் கருதப்படுகிறது.

கண்ணபிரான் எழுந்தருளியுள்ள தலமாதலால் இத்தலம் கண்ணபுரம் எனப் பெயர் பெற்றிருக்கலாம்.

நாலாயிரத்துள் இத்தலம் பற்றிவரும் பாசுரங்கள் மொத்தம் நூற்று இருபத்தெட்டாகும். அவற்றுள் குலசேகரர் பாடிய பாசுரங்கள் பதினொன்றாகும்.

திருக்கண்ணபுரத்தில் எழுந்தருளிருக்கும் எம்பெருமானைக் குலசேகரர் இராமனாகக் கண்டு மகிழ்கின்றார். தான் தாய் கோசலையாக மாறி, குழந்தை இராமனைத் தாலாட்டுகிறார்.

ஒரு நாடு சீரும், சிறப்புமாய் விளங்கவேண்டுமானால், அந்நாட்டில் இயற்கை தன் நியதிப்படி காரியங்களாற்ற வேண்டும்; மதிள் முதலான அரண்களின் பாதுகாப்பு சிறந்திருக்கவேண்டும்; கலைகள் செழித்து ஓங்கவேண்டும்; வறுமை அகன்றிடவேண்டும்; செல்வம் முதலான வளங்கள் பெருகிடவேண்டும்; கற்றோர்கள் நாளும் பெருகி, கல்விப் பயிர் தழைத்திடவேண்டும். இத்தகு அனைத்து வளங்களும் ஒருசேரப்பெற்ற பதியாக திருக்கண்ணபுரத்தினைக் காணுகின்றார் குலசேகரர். திருக்கண்ணபுரத்தானை இராமனாகக் காணும் ஆழ்வாரின் நெஞ்சம் கண்ணபுரத்தையும் அயோத்தியாகவே கண்டு மகிழ்கிறது.

திருக்கண்ணபுரத்தின் இயற்கை எழிலினை கீழ்வருமாறு நமக்குப் படம்பிடித்துக் காட்டுகிறார் ஆழ்வார்.

......வண்டினங்கள்
காமரங்க ளிசைபாடும் கணபுரத்தென் கருமணியே[42]

களைகழுநீர் மருங்கலரும் கணபுரத்தென் கருகணியே[4]

திருக்கண்ணபுரம் கைகேயியின் சொற்படி நடந்து கானேகியவன் எழுந்தருளியுள்ள திருத்தலமாகும். மேலும் அது கற்றுணர்ந்த ஞானிகள் வாழும்படியான தன்மையுடையது;[44] எல்லா சாஸ்திரங்களையும் கற்றுணர்ந்த பெரியோர்கள் வாழும் பிறப்பினை உடையது.[45] மேலும்

அத்தலம் அழிவற்றதாயும், அழகியதாயும், பெரியதாயும் விளங்கும் மதிள்களைப் பெற்றது.[46] அத் திருத்தலத்தில் எழுந்தருளியுள்ள சௌரிராசனைச் சேவித்தவர்கள் தங்கள் மனத்தினைத் தாங்களே இசைந்து கொடுக்கும் பெருமை வாய்ந்தது.[47] மேலும் அது கங்கையினும் புண்ணியத்துவம் வாய்ந்த தீர்த்தங்கள் பலவற்றைத் தன்னகத்தே பெற்றிருப்பது;[48] காவிரிநதி பாய்ந்து வளம் செய்யக் கூடியது;[49] காற்றானது கடலிலுள்ள விலையுயர்ந்த மணிகளைக் கரையிலே கொண்டுவந்து சேர்க்கும் சிறப்புடையது.[50]

இவ்வாறு திருக்கண்ணபுரத்தின் சிறப்புக்கள் பலவாறு ஆழ்வாரால் பேசப்பெறுகின்றன.

## 5.3.6. திருவாலி

சீர்காழிக்கு அருகில் ஆறுமைல் தொலைவில் இத் திருத்தலம் அமைந்திருக்கிறது. திருவாலி, திருநகரி என்னும் இவ்விரு தலங்களும் அருகருகிலேயே அமைந்துள்ளன. திருநகரில் மணவாளன் சந்நிதியும். திருமங்கையாழ்வார்க்கென்று தனி சந்நிதியும் அமைந்திருக்கின்றன. திருவாலியில் நரசிம்மப்பெருமாள் கோயில் கொண்டிருக்கின்றார். திருமங்கையாழ்வார் பிறந்த பதியாக விளங்கும் குறையலூர் இத் திருத்தலத்திற்கருகிலேயே அமைந்துள்ளது.

இங்கு எழுந்தருளியுள்ள பெருமாள் வயலாளி மணவாளன் ஆவான்; தாயார் அம்ருதவல்லி; கோயில் விமானம் ஸுமநோவிமாநம்; தீர்த்தம் ஆஹ்லாதபுஷ்கரணி. இத் திருத்தலத்தில் எம்பெருமான் வீற்றிருந்த திருக்கோலத்தில் காட்சி தருகின்றான். மேற்கு நோக்கி திருமுக மண்டலம் அமைந்துள்ளது. பரகாலனுக்கு இவ்வெம்பிரானின் காட்சி கிடைத்ததாக வரலாறுண்டு.

ஆழ்வார்கள் பன்னிருவரில் குலசேகராழ்வார் ஒரு பாசுரத்தாலும், திருமங்கையாழ்வார் நாற்பத்தொரு

பாசுரங்களாலும், இத் தலத்தை பாடியுள்ளனர். நாலாயிரத்துள் இத்தலத்தைப் பற்றி நாற்பத்திரண்டு பாசுரங்கள் பாடப் பெற்றுள்ளன.

பெருமாள் திருமொழியில் எட்டாம் திருமொழி— ஏழாம் பாசுரத்தில் இத் தலம் பற்றிய குறிப்புக் காணப்படுகிறது. இவ்வெட்டாம் திருமொழியில் திருக்கண்ணபுரத்து எம்பெருமானைக் குழந்தை இராமனாகக் கொண்டு குலசேகரர் தாலாட்டும்போது,

ஆலிநகர்க் கதிபதியே[61]

என்று இத்தலத்தைக் குறிப்பிட்டுக் காட்டுகிறார்.

### 5.3.7. திருஅயோத்தி

வடஇந்தியாவில் காணப்படும் பன்னிருதலங்களுள் அயோத்தியும் ஒன்று. காசிக்கு வடமேற்கே நூற்றிருபத்தைந்து கல் தொலைவில் இத் திருத்தலம் அமைந்திருக்கிறது. சரயு நதியைத் தன்னகத்தே கொண்டது இத் தலம். மேலும் இத் திருத்தலம் இராமபிரான் அவதாரம் செய்த பெருமையைக்கொண்டது. இத் தலத்திற்கு அண்மையில் சுமார் பத்துகல் தொலைவில் நந்திக்கிராமம் உள்ளது. இவ்விடத்தில்தான் பரதன் இராமபெருமானது பாதுகைகளை வைத்து அரசாண்டதாக வரலாறுண்டு. அயோத்தியில் எழுந்தருளியிருப்பவன் இராமபிரானாவன். தாயார் சீதாதேவியாவாள்.

அயோத்தி என்பதற்குப் பகைவர்களால் போர் செய்து வெல்ல முடியாத நகர் என்பது பொருள்.[62]

அயோத்தியில் சக்கரதீர்த்தம், குணவிமோசன தீர்த்தம், வான்மீக தீர்த்தம் ஆகிய தீர்த்தங்களுள. உலக உயிர்களின் பாவங்களைப் போக்கி அவர்களை உய்விப்பதில் இராமபிரானைப் போன்றே இத் தீர்த்தங்களும் அருள் செய்கின்றன என்பது வைணவர்தம் நம்பிக்கையாகும்.

பன்னிரு ஆழ்வார்களுள் பெரியாழ்வார் ஆறு பாசுரங்களாலும், குலசேகராழ்வார் நான்கு பாசுரங்களாலும், தொண்டரடிப் பொடியாழ்வார் ஒரு பாசுரத்தாலும், திருமங்கையாழ்வார் ஒரு பாசுரத்தாலும், நம்மாழ்வார் ஒரு பாசுரத்தாலும் இத் திருத்தலத்தை மங்களாசாசனம் செய்துள்ளனர். நாலாயிரத்துள் இத் தலம் பற்றி வரும் பாசுரங்கள் பதின்மூன்றாகும்.

குலசேகரர் தம் பெருமாள் திருமொழியில் ஐந்து இடங்களில் அயோத்தியைப் பற்றி குறிப்பிட்டுள்ளார்.

அயோத்தி நகரம் மதிளரண்களால் சூழப்பெற்று விளங்கிய சிறப்பினை குலசேகரர்,

அங்கணெடு மதின்புடைசூ ழயோத்தி[83]

என்று குறிப்பிட்டுள்ளார்.

இராமபிரானை இவ்வுலகுக்களித்த அயோத்தி மாநகரம் வளமானது; செழிப்புமிக்கது என்பதனை ஆழ்வார்,

...வளநகரம் தொழுதேத்த[84]

...நீதுறந்த வளநகரைத் துறந்து[85]

என்று குறிப்பிட்டுள்ளார்.

இவ்வாறு அயோத்தி மாநகரம் பெருமாள் திருமொழியில் சிறப்பானதொரு இடம் வகிக்கிறது.

## 5.3.8. தில்லைத் திருச்சித்ரக்கூடம்

தென்னாற்காடு மாவட்டத்தில் சிதம்பரம் தாலுக்காவின் தலைமைப் பட்டினமாக தில்லைநகர் விளங்குகிறது. இத்தலம் வடக்கில் வெள்ளாற்றையும், தெற்கில் திருநெல்வாயில், திருக்கழிப்பாலை, கொள்ளிடம் பேராற்றையும், கிழக்கில் திருவேட்களம், அண்ணாமலை நகரையும், மேற்கில் நாகச்சரியையும் எல்லைகளாகக்கொண்டு அமைந்துள்ளது.

தில்லை என்ற ஒருவகைப் புதர்ச்செடிகள் நிறைந்த வளமான இடமாதலின் இத் தலம் தில்லை என வழங்கப் பட்டது.[56]

புலியூர், பெரும்பற்றப்புலியூர், சிற்றம்பலம், புண்டரீக புரம், தனியூர், ஞானாகாசம், சிதம்பரம், பொன்னம்பலம் -இத் தலத்திற்கு வழங்கப்படும் வேறு பெயர்களாகும். எம்பெருமானாகிய ஈசன் அம்பலத்தில் திருநடனமாடும் கூத்தனாகக் காட்சியளிப்பதால் இத் தலம் சிதம்பரம் எனப் பெயர் பெற்றது. மேலும் இத் தலம் புலிக்கால் முனியாகிய வியாக்கிரபாதர் தவங்கிடந்து ஈசனின் நடனம் கண்ட இடமாதலின் பெரும்பற்றப்புலியூரென்றும், புலியூர் என்றும் வழங்கப் பெறுகின்றது.[57]

தில்லையம்பலத்திலுள்ள தீர்த்தங்கள் பன்னிரண்டு என்பர். அவை சிவகங்கை, பரமானந்ததீர்த்தம், அனந்த தீர்த்தம், நாகசேரி, வியாக்ரபாததீர்த்தம், புலிமடு, சிவப்பிரியைத் தீர்த்தம், திருப்பாற்கடல், ஓமகுளம், ஆயிகுளம், ஞானப்பிரகாசர்குளம், முன்னீர்கடல் ஆகியன.[58]

வியாக்ரபாதர் என்னும் முனிவர் தில்லைப் புதரிடையே ஓர் சுயம்புலிங்கத்தைக் கண்டெடுத்துப் பூசித்துவர, வழி பாட்டுக்குரிய மலர்களின் தேனை வண்டுகள் சுவைக்கு முன்னே, தூய்மையான மலர்களால் அவனை வழிபட ஆசைகொண்டதாகவும், இறைவனாகிய ஈசன் திருவரு ளால் வழுக்காது மரத்திலேறி தன் எண்ணத்தை நிறைவேற் றிக்கொள்ள, புலிக்கால்களும், புலிக்கைகளும், புலிக் கண்களும் வரப்பெற்றார் எனவும், திருமால் கண்ட ஈசனின் ஆனந்த தாண்டவத்தைப் பதஞ்சலியின் வழி அறிந்த வியாக்கிரபாதர் அத் தாண்டவத்தைக் காண ஆசை கொண்டார் எனவும், இறைவனும் தமது தாண்டவத்தைத் தில்லையில் காண்பாய் என்று அருளி, தன்னை எதிர்த்த காளியினை தோற்கச் செய்து, தன் பக்தனின் ஆவலை தீர்த்தார் எனவும் செய்திகளுள.[59]

இத்தகைய பெருமை வாய்ந்த தில்லையம்பதி சிறந்த சைவ, வைணவ சமயத்தலமாகத் திகழ்கிறது. இத் தலத்தில் எழுந்தருளியுள்ள பெருமாள் கோவிந்தராசராவர். கிழக்கு நோக்கி திருமுகமண்டலம் அமைந்துள்ளது; தீர்த்தம் புண்டரீக புஷ்கரணியாகும்; நாச்சியார் புண்டரீகவல்லி யாவாள்; கோயில் விமானம் ஸாத்விகவிமானமாகும். எட்டாவது நூற்றாண்டில் காஞ்சி வைகுந்தப் பெருமாள் கோயிலை நிறுவிய இரண்டாம் நந்திவர்மனால் இக்கோயில் நிறுவப் பெற்றது. பன்னிரண்டாம் நூற்றுண்டில் அநபாயன் என்ற இரண்டாம் குலோத்துங்க சோழன், சிற்றம்பலத்தைப் பெருக்கியமைக்கும் பொருட்டு, தில்லைக் கோவிந்த ராசரை அப்புறப்படுத்த, மீண்டும் கிருஷ்ணதேவராயரின் தம்பி அச்சுதராயர் பெருமாளை ஸ்தாபித்தார்.[60]

தில்லைத் திருச்சித்ரக் கூடத்தையும் அங்கு எழுந்தருளி யுள்ள எம்பெருமானையும் பன்னிரு ஆழ்வார்களுள் இருவர் மட்டும் மங்களாசாசனம் செய்துள்ளனர். குலசேகராழ்வார் பதினோரு பாசுரங்களாலும், திருமங்கையாழ்வார் இருபத்தோரு பாசுரங்களாலும் கோவிந்தராசனைப் பாடிப் பரவுகின்றனர். நாலாயிரத்துள் இத்தலம் பற்றி பாடப்பெற்ற பாசுரங்கள் முப்பத்திரண்டாகும்.

தில்லைத் திருச்சித்ரக்கூடத்துக் கோவிந்தராசன் தீவிர இராமபக்தராக விளங்கும் குலசேகராழ்வாருக்கு இராமனாகக் காட்சி தருகிறார். பெருமாள் திருமொழி—பத்தாம் திருமொழி முழுவதும் தில்லைத் திருச்சித்ரக் கூடத்தின் சிறப்புக்களைக் கூறுவதாக அமைந்துள்ளது. மேலும் இராமனது வரலாற்றினைக் கூறும் குட்டி இராமாயணமாக விளங்குகிறது.

தில்லையம்பதியின் இயற்கையெழில் முதலிய சிறப்புக்களையும், மதிளால் சூழப்பட்ட அரண் முதலான செயற்கை நலன்களையும் ஆழ்வார் தன் பாசுரங்களில் பின்வருமாறு சுவை ததும்ப உரைத்துள்ளார்.

தெவ்வரஞ்சு நெடும்புரிசை யுயர்ந்த பாங்கர்
தில்லைநகர்த் திருச்சித்ர கூடந் தன்னுள்[61]

திருச்சித்ரக் கூடத்துள் சோலைகள் செறிந்து அழகு செய்கின்றன; தளிர்களில் மலர்கள் மலர்ந்து வாசம் கமழச் செய்கின்றன; தளிர் போன்ற சிவந்த வாயினில் சோலைகள் மலர்களாகிய புன்னகை பூக்கும் அழகு உள்ளங் களைக் கொள்ளை கொள்கின்றனவாம்.

செந்தளிர்வாய் மலர்நகைசேர் செழுந்தண்
சோலைத் தில்லைநகர்த் திருச்சித்ரக் கூடம்[62]

திருமாலாகிய இராமபிரானின் சிறப்பினைச் சுட்டு முகமாக இத்தலத்திற்குச் சிறப்பளித்துப் பெருமை சேர்க் கிறார் ஆழ்வார்.

கைகேயியின் சொற்படி அரசு துறந்து, கானகம் ஏகியவன். பரதனுக்குப் பாதுகைகளையும் அரசையும் ஈந்தவன். இத்தகைய சிறப்பினனான இராமனை இத்தலத் தில் கண்டு மகிழ்ந்தவர்கட்கு நித்ய சூரிகளும் ஒப்பாகார்.[63] நித்யசூரிகளும் ஒப்பாகாத பெருமையினை உடையவர்கள் இராமபிரானைக் கண்டு மகிழ்ந்தவர்கள்; அவ்விராமனோ தில்லை திருச்சித்ரக்கூடத்துள் எழுந்தருளியிருப்பவன். எனவே, இங்கு அனைத்துப் பெருமைகட்கும் அடிப்படை தில்லைத் திருச்சித்ரக்கூடம் எனலாம்.

தில்லைத் திருச்சித்ரக்கூடத்தில் எழுந்தருளியுள்ள வன் இராமபிரான். இராமபக்தர்கள் அவனைக் கண்டு நாவார போற்றுவார்கள். அவர்கள் இப் பூமியில் அவதரித்து திரிதலால் இந் நிலவுலகம் தவம் செய்ததானது.[64] இங்கு ஆழ்வார், இராமபிரானுக்கு எத்தனையோ திருத்தலங் களிருக்க, இத் திருத்தலத்தில் எழுந்தருளியுள்ள இராமனைத் துதிப்பவர்களாலேயே இப் பூமி பாக்கியம் செய்ததாகிறது என்று இத்தலத்திற்கு ஏற்றமளித்து சிறப்பித்துக் கூறுகிறார்.

இராமவதாரம் முடித்துத் தன்னுடைய சோதிக்கு எழுந்தருளும்போது, அயோத்தியிலிருந்த எல்லா உயிர்களுக்கும் பரமபதம் தந்து வைகுந்தமேகியவன். அனைத்து உயிர்களுக்கும் ஈசனவன்; தில்லைத் திருச்சித்திரக்கூடத்துள் நித்யவாசம் செய்பவன் என்று இராமபிரான் நித்யவாசம் செய்யும் திருத்தலம் தில்லைத் திருச்சித்திரக்கூடம் என்கிறார் ஆழ்வார்.

இவ்வாறு பெருமாள் திருமொழியில் தில்லைத்திருச்சித்ரக்கூடத்தின் சீர் பலவாறு பேசப்படுகின்றது.

# குறிப்பெண் விளக்கம்

1. வ. ந., ஸ்ரீ ராமதேசிகாசார்யர் சுவாமி, சில்லறை ரஹஸ்யங்கள் (முதற் பாகம்) ப. 540.
2. கிருஷ்ணமாசார்ய சுவாமி, 'இஷ்வாகு குலதனர்- ஸ்ரீரங்கநாதன்' 19:5 (Souvenir) சிறப்பு மலர் வெளி யீட்டு விழா.
3. உ.வே.வை.மு கோபாலகிருஷ்ணமாசாரியர், (உரை) அஷ்டப்பிரபந்தம் (முதல் தொகுதி), நான்காம் பதிப்பு, (சென்னை, 1966), ப. 294.
4. ந. தர்மாரெட்டி, திருவள்ளுவர், வேமனர்-ஓர் ஒப்பாய்வு, ப. 155.
5. மாருதிதாசன், இந்துசமயக் கருத்துக்கள், ப. 82.
6. மேற்படி ப. 84.
7. நூற்றெட்டுத் திருப்பதியந்தாதி-6.
8. உ. வே. வை. மு. கோபால கிருஷ்ணமாசாரியர், (உரை.) அஷ்டப் பிரபந்தம் (முதல் தொகுதி) ப. 2.
9. நூற்றெட்டுத் திருப்பதியந்தாதி-1.
10. பெரு. திரு. 1:6.
11. மேற்படி 1:7.
12. மேற்படி 1:8.
13. மேற்படி 1:2.
14. மேற்படி 1:5.
15. மேற்படி 1:5.
16. மேற்படி 1:4.

17. மேற்படி 1:9.

18. ராய. சொ., திருத்தலப்பயணம், (காரைக்குடி, 1966) ப. 396.

19. பெரு. திரு. 2:8.

20. மேற்படி 6:7.

21. மேற்படி 4:4.

22. ந. சுப்புரெட்டியார், திருவேங்கடமும் தமிழ் இலக்கியமும், முதற்பதிப்பு, (சென்னை, 1975), ப. 57.

23. மேற்படி ப. 58.

24. நம்மாழ்வார், திருவாய்மொழி 3. 3:8

25. பொய்கையாழ்வார், முதல்திருவந்தாதி, பாசுரம் 26.

26. ஜி. டி. கோபாலகிருஷ்ணநாயுடு, ஆழ்வார்கள் அநுபவித்த அலர்மேல்மங்கைஉறைமார்பன், முதற் பதிப்பு, (கோயமுத்தூர், 1973), ப .2.

27. ஆர். பத்மநாபன், ஸ்ரீ வெங்கடேச்வரா, முதற் பதிப்பு, சென்னை, 1978), ப. 4.5.

28. எஸ். நடராஜன், ஏழுமலை ஆண்டவன், முதற் பதிப்பு, (சென்னை, 1977), ப. 31.

29. பேயாழ்வார், மூன்றாம் திருவந்தாதி, பாசுரம் 63.

30. தி.அ. க்ருஷ்ணதாஸன், திருமாலையும் ஸ்ரீ வைஷ்ணவ ஸம்பிரதாய நெறியும்', திருவல்லிக்கேணி ஸ்ரீ பார்த்த ஸாரதி ஸ்வாமி தேவஸ்தான வேத அத்யாபக கோஷ்டி சிறப்பு மலர்-1985, ப. 40.

31. ஆர். பத்மநாபன், ஸ்ரீ வெங்கடேச்வரா, ப. 46-47.

32. எஸ். நடராஜன், ஏழுமலை ஆண்டவன், ப. 33.

33. மேற்படி ப. 61-67.

34. பெரு. திரு. 4:1.
35. மேற்படி 4:3.
36. மேற்படி 4:5.
37. மேற்படி 4:4.
38. மேற்படி 5:1.
39. மேற்படி 5:2.
40. மேற்படி 5:3.
41. மேற்படி 5:9.
42. மேற்படி 8:4.
43. மேற்படி 8:9.
44. மேற்படி 8:6.
45. மேற்படி 8:8.
46. மேற்படி 8:1.
47. மேற்படி 8:2.
48. மேற்படி 8:3.
49. மேற்படி 8:10.
50. மேற்படி 8:7.
51. மேற்படி 8:7.
52. ந. சுப்புரெட்டியார், வடநாட்டுத் திருப்பதிகள், முதற்பதிப்பு, 1980, ப. 41.
53. பெரு.திரு. 10:1.
54. மேற்படி 9:1.
55. மேற்படி 9:10.
56. ஜே. எம். சோமசுந்தரம்பிள்ளை, தில்லைச் சிற்றம்பலவன் கோயில் சிதம்பரம்-தலவரலாறு, (அண்ணாமலை நகர், 1966) ப. 8,

57. மேற்படி ப. 2.

58. மேற்படி ப .4

59. மேற்படி ப. 10.11

60. ஜே. எம். சோமசுந்தரம்பிள்ளை, தில்லைச் சிற்றம்பலவன் கோயில் சிதம்பரம்-தலவரலாறு' கழகப் பொன்விழா மலர், முதற்பதிப்பு, (சென்னை, 1970), ப. 138

61. மேற்படி 10:3.

62. மேற்படி 10:2.

63. மேற்படி 10:4.

64. மேற்படி 10:5.

65. மேற்படி 10:10.



## இயல் ஆறு

# பக்தர் குலசேகரரின் கலைநலன்

### 6.0. பெருமாள் திருமொழியில் கலைநலன்

இவ்வியலில் கலை, இலக்கியக்கலை, கற்பனை, அணி, புனைந்துரை, சொல்நயம், திருத்தலங்களில் இயற்கையழகு, மெய்ப்பாடு, ஒலிநயம் ஆகியன விளக்கப்பெற்றிருக்கின்றன.

### 6.1.0. கலை

கலை—சொல்பொருள் விளக்கம், கலையின் வகைகள், கலையின் பயன் ஆகியன ஈண்டு கூறப்பெற்றிருக்கின்றன.

### 6.1.1. கலை சொல்பொருள் விளக்கம்

மக்கள் அனைவருக்கும் உணர்ச்சி என்பது பொதுவானது; ஆனால் இவ்வுணர்ச்சி கலைஞர்களிடம் நுண்மையும் மென்மையும் ஆழமும் விரிவும் ஆற்றலும் பெற்று விளங்குகிறது. இறைவன் படைத்த படைப்புக்களைக் கண்டு திளைத்து, தானும் உணர்ந்து, உணர்ந்த அவ்வுணர்ச்சியைப் பிறர்க்கு அறிவிக்க தூண்டுதலாக நிற்கும் நிலையே கலையாகும். இதனால்தான் அழகும் நுண்மையும் சேர்ந்த கவின் பொருள்களின் படைப்பையோ அல்லது ஆக்கத்தையோ கலை என்று கூறுகிறார் நா. பார்த்தசாரதி அவர்கள்.[1] கலைஞன் தான் பெற்ற அனுபவத்தை, இயற்கையிலும் வாழ்க்கையிலும் தெளிவற்ற நிலையில் உள்ள அழகின்பத்தைத் தெளிவான நிலையில் மனம் நன்கு நுகரும்படி

கலையாகத் தருகிறான். "எங்கு அனுபவம் உள்ளதோ அங்குக் கலையும் இருத்தல் கூடும். காரணம், அழகுடன் சேர்ந்த அனுபவம்தான் கலையாக மாறுகின்றது[2].

'கலை' என்ற சொல் 'கல்' என்பதிலிருந்தே பிறக்கிறது. கலை என்ற சொல் கூறு அல்லது பங்கு, அறிவு என்னும் பொருள்களைக் குறிக்கின்றது.[3] கலை என்பதற்கு "கலைக் கப்படுவது" எனப் பொருள் கொள்ளலாம். அதாவது சிந்திக்காத்தன்மை, அறியாமை ஆகியன கலைக்கப்பட்டு, அறிவுச் சுடரொளி வீசும் நிலையாகும்.

## 6.1.2. கலையின் வகைகள்

கலைகள் அறுபத்துநான்கு வகையினவாக உள்ளன.[4] கற்பதற்கு உரியவற்றைக் கலை என்றழைத்தாலும் கற்பனை, உணர்ச்சி முதலியவற்றைத் தன்னகத்தே கொண்டு அமையும் ஓவியம், கவிதை, சிற்பம், இலக்கியம், நாட்டியம், நாடகம் என்பவையே கலை என்று சிறப்பித்து வழங்கப்பெறுகின்றன.

கலைகளனைத்தும் அறிகலை, கலை, அருங்கலை என்னும் மூன்று வகைகளில் அடங்கும்.[5] ஆக்கவியலின் உந்துதலால் அமையும் நற்பண்பைச் சார்ந்து தொழிற்படும் அறிவின் பயனாய் அழகுணர்ச்சி உருவாக்கிட, பொருட் பயனைக் கருதாத வகையில் எழுவன அருங்கலையாகும்.[6]

கலைகள் பொதுவாகக் கவின்கலைகள் என்றும், அழகு கலைகள் என்றும் இருவகைப்படும்.[7] கவின்கலைகள் இசை, ஓவியம், சிற்பம், கட்டிடம், நாட்டியம், நாடகம் என்பன. அவை கற்பனை, உணர்ச்சி, வடிவம், பொருள் முதலிய வற்றைக் கொண்டு அமைவன. இக் கவின்கலையினை, நிலைக் கலைகளென்றும், இயங்கு கலைகளென்றும் வகைப் படுத்தலாம்.[8] காலம் என்னும் அளவு இல்லாத கலைகள் நிலைக் கலைகளாவன. அவை ஓவியம், சிற்பம் ஆகியன. காலம் என்னும் அளவுடைய இசை முதலிய கலைகள் இயங்குகலைகளாகும்.

### 6.1.3. கலையின் பயன்

கலைகள் சில சமயங்களினால் ஆதரிக்கப்பட்டும், வெறுத்து ஒதுக்கப்பட்டும் வந்தாலும், அவை மனிதனது உணர்ச்சிகளைப் பண்படுத்தி நேர்வழியில் அழைத்துச் செல்கின்றன. "நல்ல கலைகள் புலன்களை வளர்ப்பதோடு பண்படுத்தும் தன்மையும் உள்ளவை"[9] என்பார் அறிஞர் மு.வ. மனமென்னும் புரவி தறிகெட்டு ஓடாமல், கலை கடிவாளமாக இருந்து பயன் விளைவிக்கிறது.

இயற்கையின் அழகு நொடிக்கு நொடி மாறும் தன்மையுடையது. அத்தகைய மாறும் இயற்கையழகு கலைகளில் மாறாத வடிவம் ஏற்கின்றது. அலைபாயும் மனத்தினை ஒரு நிலையில் நிறுத்த கலை பெரிதும் உதவுகிறது.

### 6.2.0. இலக்கியக் கலை

ஈண்டு, இலக்கியம்—விளக்கம், பயன் ஆகியன உரைக்கப் பெற்றிருக்கின்றன.

### 6.2.1. இலக்கியம்—விளக்கம்

உணர்ச்சிகளின் மொத்தவடிவமாக மனிதன் உள்ளான். அவனது வாழ்க்கை என்பது பல்வேறு உணர்ச்சிகளின் போராட்டமேயாகும்.

கவிஞனின் உணர்ச்சிப் பெருக்கத்திற்கு ஒலியும் எழுத்தின் ஊடே அமையும் வரியும் மொழியின் கருவிகளாக அமைந்து, அளிக்கப்பெறும் உருவமே இலக்கியக்கலையாகும்.

அவ்விலக்கியக்கலை அக் கவிஞன் வாழ்ந்த இடம், காலம், சூழ்நிலைகளுக்கேற்றவாறு அமைந்து அவன் காலத்துச் சமுதாயத்தைப் படம்பிடித்துக் காட்டுவதாய் அமையும்.

"ஒரு சமுதாயத்தின் விருப்பு, வெறுப்பு, நம்பிக்கை முதலியவற்றை வளர்த்துப் பண்படுத்துவது அந்தச் சமுதாயத்தின் இலக்கியம்"[10] என்பர் அறிஞர் மு.வ.

"எல்லா இலக்கியங்களும் ஏதேனும் ஒருவகையில் நம் வாழ்க்கையை ஒட்டியதுதான்"[11] என்று விளக்கம் தருகிறார் அறிஞர் சிதம்பர ரகுநாதன்.

இலக்கியம் என்பது மக்களின் வாழ்க்கையைக் காட்டும் ஓர் அற்புதக் கண்ணாடியாகும். இலக்கியம் என்பதற்கு இலக்கணம் அமைந்த நூல்; எடுத்துக்காட்டும் குறி; இலக்கணம் அமையப்பெற்ற பொருள் எனப் பல்வேறுபட்ட பொருள்களுள.[12] அறிவும், திருவும், ஆற்றல் அமைந்த சான்றோர்களின் வாழ்வும் செயலும், வாழ்க்கை அனுபவங் களும், பிற்காலமக்களின் நல்வாழ்வுக்குப் பயனளிக்கும் வகையில் தொகுத்து வைக்கப்பட்ட கருவூலங்களே இலக்கியங்களாகும்.[13]

'இலக்கியம்' என்னும் சொல் 'இலஷியம்' என்னும் வடமொழிச் சொல்லின் திரிபாகும். 'இலஷியம்' என்னும் சொல்லின் 'ஷி' என்பது 'க்கி' என்று மாற, இலஷியம் என்பது இலக்கியமானது. ஆகவே இலக்கியம் என்பது தன்னகத்தே உயர்ந்த ஓர் இலக்கினை, இலட்சியத்தை, குறிக்கோளைக் கொண்டு சமுதாய நல்வாழ்விற்குத் துணை நிற்பனவாகும்.[14]

### 6.2.2. பயன்

இவ்விலக்கியக்கலை மனித சமுதாயத்திற்கு அறிவுரைப் பகர்வதோடு ஆனந்தத்தையும் அளிக்கின்றது.

இலக்கியத்தின் பயன்பாடுகளை அறிஞர் கைலாசபதி பின்வருமாறு கூறுகிறார்.

இலக்கியக்கல்வியை நோக்கினால் குறைந்தபட்சம் மூன்று முக்கியப் பயன்பாடுகள் புலனாகும். முதலாவது,

மொழித்திறன் பற்றிய அறிவு; இரண்டாவது, இன்ப நுகர்ச்சி; மூன்றாவது வாழ்க்கையைப் பற்றியும் உலகைப் பற்றியும் ஏற்படும் புதிய விளக்கம்.[15]

### 6.3.0. கற்பனை

கற்பனை விளக்கம், வகைகள், இன்றியமையாமை ஆகியன ஈண்டு விளக்கப்பெற்றுள்ளன.

### 6.3.1. விளக்கம்

இலக்கியக்கலையில் கற்பனை, உணர்ச்சி, பொருள், வடிவம் ஆகியன முக்கிய இடம் பெறுகின்றன.

கற்பனை என்பது கவிஞனிடமுள்ள எளிய, தனித்த, வன்மையான ஆற்றலாகும். கவிஞன் தனது படைப்பில் மேற்கொள்ளும் ஓர் உத்தியாகும். இக் கற்பனை கவிஞனுக்கே சிறப்பாக அமையும் பண்பாக விளங்குகிறது. மனித மனமானது இயற்கையோடு தொடர்புகொள்ளும் ஆற்றலைப் பெற கற்பனை பெரிதும் அவசியமாகிறது.

கற்பனை என்ற சொல் கல்—கற்பித்தல் என்ற வினையடிப்படையில் தோன்றியதாகும்.[16] பண்டைத்தமிழ் இலக்கியங்களில் இடம்பெறாத 'கற்பனை' என்ற சொல் திருமூலரின் திருமந்திரத்தில்தான் முதன் முதலாகக் காணப் பெறுகின்றது.[17]

### 6.3.2. வகைகள்

கற்பனை படைப்புக் கற்பனை, இயைபுக் கற்பனை, கருத்துவிளக்கக் கற்பனை என மூவகைப்படும்.[18] பொது நிலையில் கற்பனையை இருவகைப்படுத்தலாம். அவை உண்மைக்கற்பனை, வெறுங்கற்பனை ஆகியன. உள்ளதையே சிறப்பித்து உயர்வுநவிற்சியும் அளவாகக் கூட்டிக் கூறுவது உண்மைக் கற்பனையாகும்.[19] உண்மை இல்லாததாக, ஆற்றல் குறைந்த உணர்ச்சியுடன், உயர்வுநவிற்சி வரம்பு

கடந்த நிலையில், வேடிக்கைப் போக்குடன் அமைவது வெறுங்கற்பனையாகும். மனப்பரப்பின் மீது படியும் காட்சி களை விருப்பம்போல் மாற்றும் இயல்பினது வெறுங் கற்பனை.[30] மேலும் கற்பனை ஆக்கக் கற்பனை, நினைவுக் கற்பனை என்று வகை பிரிக்கப்படுகிறது.

## 6.3.3. இன்றியமையாமை

இலக்கியத்தில் கற்பனை மிகவும் இன்றியமையாத உறுப்பாக விளங்குகிறது. கற்பனையை இலக்கியத்தின் உயிராகக் கொள்ளலாம். இதனால் கற்பனை இல்லாத இலக்கியம் சிறகில்லாப் பறவையென மதிப்பிழந்துபோகும். இதனை, "இலக்கியத்தில் கற்பனை தவிர்க்க முடியாத ஒன்று. கற்பனை இல்லாத கலைப்படைப்பு வறட்டுத் தனமானச் செய்தித் தொகுப்பாக அல்லது விளக்கப் பட்டியலாக இருக்கமுடியுமே ஒழிய சுவையூட்டும் கலையாக முடியாது"[31] என்பர் அறிஞர் ந. பிச்சமுத்து.

## 6.4. அணி

அணிநலன்கள் யாவும் கற்பனையில் அடங்கிவிடக் கூடியனவாகும். இலக்கிய நங்கைக்கு அணிசெய்து அவளை அழகுடன் பொலியச் செய்வன அணி வகைகளேயாகும். உள்ளுணர்வு, கற்பனை, உள்ளக்கிளர்ச்சி, சுவை, மெய்ப் பாடு என்ற நிலைகள்தான் அணியாக மாறி வெளிப்படு கின்றன என்பது அறிஞர் தெ.பொ.மீ. அவர்களின் கருத்து.[32]

அணி என்பது அணியப்படுவதெனவும், அழகைத் தருவதெனவும் பொருள்படும்.[33] அணி என்னும் சொல்லிற்கு அழகு, வனப்பு, ஒப்பனை, ஆபரணம், பெருமை, இனிமை, வரிசை முதலிய பல பொருள் களுண்டு.[34]

பெருமாள் திருமொழியில் பல்வேறுபட்ட அணிகள் அமையப் பெற்றுள்ளன. இவ்வியல் அவற்றை ஒருசிறிது ஆயமுயல்கிறது.

உவமை

உவமம் என்பது ஒரு பொருளோடு ஒருபொருளை ஒப்புமைக் கூறுதலாகும். ஒருபொருளோடு மற்றொரு பொருளை ஒப்பிடும்போது, வினை, பயன், வடிவம், வண்ணம் ஆகியவற்றின் அடிப்படையில் ஒப்புமை காண வேண்டும். மேற்குறிப்பிட்ட நான்கு பண்பினுள் ஒன்றும், பலவும் ஒத்திருக்கலாம்.

கவிஞனது சுற்றுச்சார்பு, தொழில், மரபு, வாழ்க்கை அனுபவத்தைப் பொறுத்தே உவமை முதலிய அணிநலன்கள் அமைகின்றன. இவ்வுவமை, ஒரு சொல்லிலோ, தொடரிலோ, பாட்டிலோ அமையப் பெறலாம். கவிஞனது உவமை நயத்தாலும், கற்பனைத் திறத்தாலும் ஒன்று மற்றவைகூட உயர்வு பெற்றுவிடுகின்றன.

திருமாலின் திருமேனிக்குப் பல்வேறு பொருள்களை உவமையாகக் கூறுவர் குலசேகராழ்வார்.

திருமாலினது கண்களைக் காணும்போது ஆழ்வாருக்குக் கமலமலரின் நினைவு தோன்றுகிறது. இதனை,

கண்வளரும் கடல்வண்ணர் கமலக் கண்ணும்[95]

மலர்க் கண்ணனை[96]

தண்ணந் தாமரைக் கண்ணனே[97]

என்ற பாசுர வரிகளால் அறியலாம்.

திருமாலினது சிவந்த வாய் நம் ஆழ்வாருக்குப் பவளத்தின் நினைவினைத் தோற்றுவிக்கின்றது. இதனை,

செம்பவள வாயான்[98]

செம்பவளத் திரள்வாய்[99]

என்ற தொடர்கள் உணர்த்துகின்றன.

திருமாலினது திருமுகத்திற்குக் கமல மலரையும், திங்களையும் உவமையாகக் கூறுகிறார் குலசேகரர். திருமாலினது திருமுகம் சிவந்த தன்மையுடையதாய், மலர்ச்சியுடையதாய், கருணை நிரம்பப்பெற்றது. ஆதலால், திருமாலின் முகத்திற்குச் சிவந்த தாமரைமலரையும், குளிர் நிலவையும் உவமையாக்கிக் கூறியுள்ள ஆழ்வாரது திறம் பாராட்டுதற்குரியது.

**ஒளிமதிசேர் திருமுகம்**[30]

**......கமலம்போல் முகமும்**[31]

திருமாலினது திருத்தோள்களுக்கு மலையதனை உவமை கூறுகிறார் ஆழ்வார். இதனை,

**மல்லணைந்த வரைத்தோளா**[32]

**......வரைநெடுந்தோள்**[33]

என்ற தொடர்களால் அறியலாம்.

கண்ணனாகிய குழந்தையின் திருக்கரத்திற்குத் தளிரினை உவமையாகக் கூறுகிறார் குலசேகரர்.

**ஒழுகு பேரெழி லிளஞ்சிறு தளிர்போல் ஒருகை**
**யால்**[34]

தந்தை தசரதனாக மாறி இராமபிரானது நடையழகைக் கண்டு மகிழும் ஆழ்வார், இராமனது நடையழகில் கைம்மாவின் நடையினைக் கண்டுகளிக்கிறார்.

**கைம்மாவின் நடையன்ன மென்னடையும்**[35]

திருமாலின் திருமேனிவண்ணம் கருமைநிறம். இதனை சில உவமைகளால் ஆழ்வார் கீழ்வருமாறு நமக்கு உணர்த்துகின்றார்.

**காயாம்பூ மலர்ப்பிறங்க லன்ன மாலை**[36]

**...வேலை**
**வண்ணனை...**[37]

கடல்வண்ணர்[38]

செங்கணெடுங் கருமுகிலை[39]

மிக்கிலங்கு முகில்நிறத்தாய்[40]

பொதுவாகப் பெண்களின் கண்களுக்கு வேல், மீன், வண்டு, மான் முதலானவற்றைக் கவிஞர்கள் உவமையாகக் கூறுவர். இவ்வாறே குலசேகரரும் கீழ்வருமாறு மாதர்களின் விழிகளை உவமிக்கின்றார்.

கெண்டையொண் கண்மட வாள்[41]

மையரி யொண்கண்ணி னாருமல்லோம்[42]

கொல்லணைவேல் வரிநெடுங்கண்[43]

கலைவணக்கு நோக்கரக்கி[44]

சீதையின் அழகினை விளக்கவந்த குலசேகரர் பல்வேறு சிறந்த உவமைகளைக் கொண்டு விளக்குகிறார்.

வேய்போலு மெழில்தோளி[45]

...பூவை போலும்
மின்பற்றா நுண்மருங்குல் மெல்லியல்[46]

என்ற பாசுர வரிகளில் சீதையின் அழகிய தோளிற்கு மூங்கிலையும், அவளது மருங்கிற்கு மின்னலையும் உவமித்துக் காட்டுகிறார்.

மேலும் குலசேகரர் தம் பெருமாள் திருமொழி—ஐந்தாம் திருமொழி முழுமையும் உவமையணியே காணப்படுகிறது.

இவ்வாறு குலசேகராழ்வார் பல்வேறு உவமைகளை வழங்கி, தனது கவிதைத்திறத்தால் கற்போர் உள்ளத்தை ஈர்க்கின்றார். மேலும் பெருமாள் திருமொழியில் தேவைப் படும் இடங்களிலெல்லாம் பிற அணி வகைகளும் அமையப் பெற்று கற்போருக்கு இன்பம் பயக்கின்றன.

**தற்குறிப்பேற்றம்**

இயற்கையாக நிகழ்கின்ற ஒரு நிகழ்ச்சிக்குப் புலவன் தானொரு காரணத்தைக் கற்பனை செய்து கூறுதல் தற்குறிப்பேற்ற அணியாகும்.

பெருமாள் திருமொழியில் குலசேகராழ்வார் தான் திருமால் பக்தன் மட்டுமல்ல; ஓர் சிறந்த கவிஞனுமாவன் என்பதை நிலைநாட்டும் வகையில் தற்குறிப்பேற்ற அணியை ஆண்டுள்ளதைக் கீழ்வரும் அவர்தம் பாசுரச்செய்தியால் அறியலாம்.

காவேரியின் நடுவில் திருவனந்தாழ்வான் மீது பள்ளி கொண்டிருக்கின்றான் பெரியபெருமாள். அக் காவேரிநதி வற்றாத நீர்வளமுடையது. எப்பொழுதும் அலைகள் பாய ஓடும் தன்மையது. அக் காவேரியின் அலைகள் ஆங்கு அனந்தாழ்வான்மீது பள்ளிகொண்டுள்ள பெருமானின் திருவடிகளைத் தொட்டுச் செல்வது இயல்பு. இவ்வியல்பான காட்சியைக் குலசேகரர் தன் கற்பனைத்திறத்தால் காவிரியைக் கன்னியாகவும், அதன்கண் வீசும் அலைகளை அக் கன்னியின் கைகளாகவும்கொண்டு, அக் காவிரிக் கன்னி தன் அலைகளாகிய கைகளால் பெரியபெருமானின் திருவடிகளைத் தொட்டு வணங்குவதாய் கேட்போர் உள்ளங்களைப் பிணிக்கும் வகையில் படைக்கின்றார். இதனை,

> திருவரங்கப் பெருநகருள் தெண்ணீர்ப் பொன்னி
> திரைக்கையா லடிவருடப் பள்ளி கொள்ளும்[17]

என்னும் பாசுரவரிகள் உணர்த்தும்.

**உயர்வுநவிற்சியணி**

உள்ளதை மிகைபட புனைந்து கூறுவது உயர்வுநவிற்சியாகும். பொருள்களின் மேம்பாட்டினைப் புலப்படுத்தப் பெரிதும் இவ்வணி உதவுகிறது.

ஆகாயத்தை எட்டும்படியான மதில்களால் சூழப் பட்டது வித்துவக்கோடு. அவ் வித்துவக்கோட்டில் உறைபவன் எம்பெருமானாகிய வித்துவக்கோட்டம்மான். ஆகாயத்தை எட்டும்படியான மதிள்கள் என்று கூறும் போது மதிள்களின் உயர்வின் சிறப்பினை அறியமுடிகிறது.

**விண்டோய் மதிள்புடைசூழ் வித்துவக்கோட் டம்மா![48]**

வித்துவக்கோட்டின் நீர்வளம், திருக்கண்ணபுரத்தின் நீர்வளம், செல்வவளம் முதலானவற்றைக் கூறவந்த குலசேகரர், அவற்றைச் சிறிது மிகைபடப் புனைந்து உயர்வு நவிற்சிதோன்ற உரைக்கின்றார்.

**மீன்நோக்கும் நீள்வயல்சூழ் வித்துவக்கோட் டம்மா![49]**

கடலிலுள்ள மீன்கள் நோக்குகின்றன; கடல்வற்றி விட்டாலும் நமக்குப் புகலிடம் இதுவே என்று பரந்த வயல் களாலே சூழப்பட்ட வித்துவக்கோட்டினை நோக்குகின்றன. மீன்நோக்கும் வயல்களால் சூழப்பட்ட வித்துவக்கோடு என்று கூறும்போது வித்துவக்கோட்டின் நீர்வளச் சிறப்பினை நன்கு அறியமுடிகிறது.

திருக்கண்ணபுரத்தின் செல்வவளத்தின் சிறப்பினைக் குலசேகரர் பின்வருமாறு உயர்வுநவிற்சிபட கூறுகின்றார். "காற்றானது, கடலிலுள்ள மணிகளைக் கரையிலே கொணர்ந்து எறியும் திருக்கண்ணபுரம்."[50]

திருவரங்கமும், திருவேங்கடமும் வைணவர்களுக்கு இரு கண்களாக விளங்கும் திருத்தலங்களாகும். இவ்விரு தலங் களிலும் சிவன், பிரம்மா, இந்திரன், மற்றுமுள்ள தேவர்கள் அனைவரும் ஒருவர்க்கொருவர் நெருக்கித்தள்ளிக் கொண்டும், மலர்மாரி சொரிந்துகொண்டும் ஆலயத்தின் உள்புக முயலுகின்றனராம். இவ்வாறு உயர்வுநவிற்சிபட ஆழ்வார் பாடுவதைப் பின்வரும் அவர்தம் பாசுரவரிகள் நன்கு உணர்த்துகின்றன.

**பின்னிட்ட சடையானும் பிரமனு மிந்திரனும்**
**துன்னிட்டுப் புகலரிய வைகுந்த நீள்வாசல்[51]**

அணிமலர்மே லயனரனிந் திரனோடு ஏனை
யமரர்கள்தங் குழுவும்அரம் பையரும் மற்றும்
தெளிமதிசேர் முனிவர்கள்தம் குழுவ முந்தி
திசைதிசையில் மலர்தூவிச் சென்று சேரும்[82]

புகழாப் புகழ்ச்சியணி

ஒன்றனை பழிப்பதுபோல் புகழ்வது புகழாப்புகழ்ச்சி யணியாகும். இதனை, தண்டி,

பழிப்பது போலும் பான்மையின் மேன்மை
புலப்பட மொழிவது புகழாப் புகழ்ச்சி[83]

என்று கூறும்.

தாய்முலைப் பாலி லமுதிருக்கத்
தவழ்ந்து தளர்நடை யிட்டுச்சென்று
பேய்முலை வாய்வைத்து நஞ்சையுண்டு
பித்தனென் றேபிற ரேசநின்றாய்[84]

எம்பெருமானாகிய கண்ணன் பூதனையை அழித்த செய்தி, கண்ணனை இழித்துரைப்பது போல் அமைந் திருப்பினும் உண்மையில் அச்செய்தி கண்ணனுக்குப் புகழைத்தரும் ஒன்றாகவே அமைந்துள்ளதால், இப்பாசுரம் புகழாப் புகழ்ச்சியணியாகும்.

உருவகம்

உவமையாம் பொருளையும், உவமிக்கப்படும் பொருளையும் வேறுபாடு ஒழிவித்து ஒன்றென்பதோருணர்வு தோன்ற பேதமில்லாதாக்கின் அஃது உருவகமாகும்.[85]

குலசேகரர் இராமபிரானை கருமேகமாக—வில்லுடன் கூடிய ஓர் நீலமேகமாகப் பின்வருமாறு அழகாக உருவகப் படுத்துகின்றார்.

மெய்ச் சிலைக்கரு மேகமொன்று[86]

மொழி என்பது மனிதன் தன் கருத்தினை வெளிப்படுத்தப் படைத்துக்கொண்ட ஓர் அற்புதக் கருவியாகும். எங்கும் நிறைந்திருக்கின்ற முழுமுதற்பொருள் மொழியாகவும் விளங்குகிறது என்பது குலசேகரரது கருத்தாகும். திருமாலைத் தமிழின்பப் பாவாக—வடமொழியாகக் கண்ணுறுகின்றார் ஆழ்வார். இதனை,

அமரர்கள்தந் தலைவனையும் தமிழி னின்பப்
பாவினைஅவ் வடமொழியைப்பற்றற்றார்கள்
பயிலரங்கத் தரவணையில் பள்ளி கொள்ளும்
கோவிலை[17]

என்ற பாசுர வரிகளால் அறியலாம்.

## 6.5. புனைந்துரை

குலசேகராழ்வார் தான் ஒரு சிறந்த கவிஞர் என்பதனைக் காட்டிடும் நிலையிலும் திருமாலையே பொருளாகக்கொண்டு பாசுரங்களைப் பாடி இருத்தல் அவருடைய சிறப்பினை எடுத்துக்காட்டுகிறது. சான்றாக, கண்ணனாகிய கடவுளின் திருவுருவக்காட்சியை ஆழ்வார் படம்பிடித்துக் காட்டுவதைக் கூறலாம்.

கண்ணனின் திருமார்பில் அழகிய வனமாலை பிரகாசிக்கின்றது. அவனது திருமுடியோ மயிலிறகுகளால் அலங்கரிக்கப்பட்டுள்ளது. அவனது காதினில் பூங்கொத்துக்கள் புணரப் பெற்றிருக்கின்றன. மிகவும் மெல்லியதான ஆடை அவனது திருவரையில் சாத்தப்பட்டுள்ளது. இப்படிக் கூறும்போது கண்ணனது திருவுருவம் நம் மனக்கண்ணில் தெரிகிறது.

மங்கல நல்வன மாலைமார்வி
லிலங்க மயில்தழைப் பீலிசூடி
பொங்கிள வாடை அரையில்சாத்திப்
பூங்கொத்துக் காதில் புணரப் பெய்து[18]

இவ்வாறே கண்ணபிரான் தயிர் கடையும் காட்சி, கண்ணனாகிய குழந்தை பாலருந்தும் காட்சி, இராமபிரான் திருவடிசோதிக்கு எழுந்தருளும் காட்சி ஆகியனவும் அழகு பட வருணனை செய்யப்பட்டுள்ளன.[59]

## 6.6. சொல்நயம்

குலசேகரர் தன் பாசுரங்களில் ஆண்டுள்ள சொற்கள் ஆழ்ந்த பொருள்கொண்டு நிற்கின்றன. சொல் வெளித் தோற்றத்திற்கு எளிய பொருள் கொண்டிருப்பினும் உள் தோற்றத்தில் சிறப்புடைய தத்துவப்பொருளைக் கொண்டிருத்தலைக் காணலாம்.

கொடிய வினைகளை

செடியா வல்வினைகள்[60]

என்று உருவகிக்கின்றார் ஆழ்வார். செடியானது நாளுக்கு நாள் பெருகி, அடர்ந்திருக்கும் தன்மையது. அவ்வாறே வல்வினைகளும் நாளுக்குநாள் பெருகும் தன்மையுடையன என்ற உட்கருத்தை இத்தொடர் அறிவித்து நிற்கிறது. மேலும் செடியானது வெட்ட வெட்ட வளரும் இயல்பினது. அது வேரோடு பிடுங்கப்படும்போதுதான் வளர்தல் என்னும் நிலையை இழந்து அழிகின்றது. அதுபோலவே எம்பெருமானாகிய திருமாலினது கருணையினால் இருவினைகளும் தீர்க்கப்பட்டு தீயினில் இட்ட தூசாகின்றது.

கடலென்பது இயற்கையின் ஓர் உன்னத படைப்பு. கடலில் உருவாகும் அலைகள் எழுவதும், விழுவதுமாக இருக்கும். கடலினது இவ்வமைதியற்ற தன்மையை, 'ஓ' என்னும் பேரிரைச்சலைக் குலசேகரர் கடலுக்கு அடையாக அமைக்கும் ஒரே சொல்லினால் நமக்கு விளக்குவது அவரது கவித்துவத்திற்கு ஒரு சிறந்த சான்றாகும்.

குரைகடலை[61]

எம்பெருமானாகிய திருமால் தீமையை அழித்து, தருமத்தை நிலைநாட்டுதற்காக அவதாரம் செய்தார்

என்பதை முன்னர் கண்டோம். எம்பெருமான் "தண்டிப்பதும் தலையாலே" என்கிறது வைணவம். இங்குக் கண்ணபிரான் பூதனை முதலான அரக்கர்களை அழித்ததும் அவர்கள்பாலுள்ள அருளினாலாகும் என்பர் ஆழ்வார். இக்கருத்து அவர்தம் பாசுரத்தில் வரும் "அருள்செய்து" என்ற ஓர் சொல்லினால் விளங்குகிறது.

வஞ்ச மேவிய நெஞ்சுடைப் பேய்ச்சி
    வரண்டு நார்நரம் பெழக் கரிந் துக்க
நஞ்ச மார்தரு சுழிமுலை அந்தோ!
    சுவைத்து நீ அருள் செய்து வளர்ந்தாய்[62]

## 6.7. திருத்தலங்களின் இயற்கையழகு

திருவரங்கம், திருவேங்கடம், திருவித்துவக்கோடு, தில்லைத் திருச்சித்ரக்கூடம், திருக்கண்ணபுரம் ஆகிய வைணவத் திருத்தலங்களின் இயற்கையழகினைச் சிறப்பாக வருணித்துப் பாடுகின்றார் குலசேகராழ்வார்.

மாடமாளிகைகள் நிறைந்தது திருவரங்கம்; செல்வச் செழிப்பு மிக்கது; மலர்ப்பொழில்கள் பல உடையது; சேலார்ந்த நெடுங் கழனிகளுடையது; பற்றற்றவர்கள் வாழுமிடமாக விளங்குவது. திருவரங்கநாதனது கோயிலின் முழவோசை கடலினது ஓசையினைக் காட்டி நிற்கும் தன்மையது.

சேலார்ந்த நெடுங்கழனி சோலை சூழ்ந்த
திருவரங்கம்[63]
களிமலர்சேர் பொழிலரங்கம்[64]

இப் பாசுரத் தொடர்கள் திருவரங்கத்தின் இயற்கை யழகினைச் சிறப்பாக விளக்கிக் காட்டுகின்றன.

திருவேங்கடமலையில் தேன்சிந்தும் பூஞ்சோலைகளுள; தேன்நாடும் வண்டினங்கள் உள; அவை மேனகை, ஊர்வசி முதலிய வான்மகளிரின் பாடலையும் விரும்பிடாதவையாகிய

இசைபாடும் தன்மையன. இத்தகைய இயற்கையழகு பொலி யும் திருவேங்கடத்தைக் கீழ்வரும் பாசுரவரிகளால் நமக்குப் படம்பிடித்துக் காட்டுகிறார் குலசேகரர்.

பண்பகரும் வண்டினங்கள் பண்பாடும் வேங்கடம்[65]

தென்னவென வண்டினங்கள் பண்பாடும் வேங்கடம்[66]

தேனார்பூஞ் சோலைத் திருவேங் கடம்[67]

வெறியார்தண் சோலைத் திருவேங் கடமலை[68]

வித்துவக்கோட்டின் இயற்கையழகினை அள்ளிப் பருகியக் கவிஞர் குலசேகராழ்வார், பின்வரும் பாசுரத் தொடர்களில் நமக்கு அவ்வழகினை நன்கு காட்டுகின்றார்

விரைகுழுவும் மலர்ப்பொழில்சூழ் வித்துவக்கோடு[69]

விண்டோய் மதிள்புடைசூழ் வித்துவக்கோடு[70]

மீன்நோக்கும் நீள்வயல்சூழ் வித்துவக்கோடு[71]

வித்துவக்கோட்டினைச் சுற்றிச் சூழப்பட்டுள்ள மதிளானது ஆகாயத்தை எட்டும்படியான தோற்றத்துடன் காட்சியளிக்கிறது. கடலில்வாழும் மீன்களோ, ''இக்கடல் வற்றிவிட்டாலும் நமக்குப் புகலிடம் இதுவே'' என்று வித்துவக்கோட்டிலுள்ள பரந்த வயல்களை நோக்குகிறது. இவ்வாறு வித்துவக்கோட்டின் நீர்வளம், நிலவளம், சோலை எழில், மதிள் உயர்வு ஆகியவற்றை குலசேகரர் சுவைபட உரைப்பது அவரது கவிநலச் சிறப்பிற்குத் தகுந்த சான்றாகும்.

தில்லைத் திருச்சித்ரக் கூடத்தின் சோலையழகை ஆழ்வார் ஓர் உவமை மூலம் அழகாக வருணித்துக்காட்டு கிறார்.

செந்தளிர்வாய் மலர்நகைசேர் செழுந்தண் சோலைத்
தில்லைநகர்த் திருச்சித்ர கூடந் தன்னுள்[72]

தில்லைத் திருச்சித்ரகூடம் மலர்கள் நிறைந்த சோலை சூழ் செறிந்தது. செவ்வாயிதழில் புன்னகைப் பூப்பது

போல சிவந்த தளிர்களிடத்தில் மலர்கள் மலர்கின்ற சோலைகள் சூழ்ந்தது என்று அழகாக சித்ரகூடத்தின் இயற்கையழகைப் புனைந்துரைக்கிறார். திருக்கண்ணபுரம் சோலைகள் செறிந்தது: அதனால் வண்டுகளின் ரீங்காரம் மிக்கது; கணபுரத்து வண்டினங்கள் சிறந்த பாகவதர்களாகி காமரம் என்னும் இசையைப் பாடிக்கொண்டிருக்கின்றன.[73] கங்கையிலும் புண்ணியத்துவம் வாய்ந்த தீர்த்தங்கள் பல இருக்கின்றன;[74] கடலிலுள்ள முத்துப்போன்ற மணிகளைக் காற்றானது கரையிலே கொண்டுவந்து சேர்த்துத் திருக்கண்ணபுரத்தானுக்குச் சேவை செய்துகொண்டு இருக்கிறது.[75] களையாகப் பறித்துக் கரையிலே எறியப்பட்ட செங்கழுநீர் மலர்கள் எறியப்பட்ட இடங்களிலே கிடந்து மலர்கின்றனவாம்.[76] இத்தகைய இயற்கையழகு செறிந்த கண்ணபுரத்தில் எழுந்தருளி இருக்கும் நீலமாணிக்கத்தைக் கண்டவர்கள் தாமே உகந்து தங்களுடைய நெஞ்சங்களை அவனுக்கு வழங்கிவிடுவார்கள்.[77] இவ்வாறு திருக்கண்ண புரத்தின் எழில்நலம், நீர்வளம், சோலைவளம், நிலவளம் ஆகியனவற்றை அழகாகக் குலசேகரர் வருணிக்கின்றார்.

## 6.8. மெய்ப்பாடு

மெய்ப்பாடு என்பது உள்ளத்துணர்வின் வெளிப் பாடாகும். இதனை தண்டியார்,

அவைதாம்
வீர மச்ச மிழிப்பொடு வியப்பே
காம மவல முருத்திர நகையே[78]

என எட்டு வகையினதாகக் குறிப்பர். தொல்காப்பியரும் இதனை எட்டு வகையினதாகவே கொள்கிறார்.[79]

இளிவு, இழவு, அசைவு, வறுமை ஆகிய நான்கு பொருள் களின் அடிப்படையில் அவலம் தோன்றுகிறது என்பர் தொல்காப்பியர்,

பெருமாள் திருமொழியில் அவலச்சுவையும் வெகுளிச் சுவையும் சிறப்பிடம் பெறுகின்றன. பெருமாள் திருமொழி யில் இழவு என்பதன் பொருட்டே அவலச்சுவைத் தோன்று கின்றது. தசரதன் தன் மகன் இராமன் காடேகிய நிலையில் அவனை இழந்து ஏங்கிய துன்பநிலையை ஒன்பதாம் திருமொழியில் சொல்லிப் புலம்புதலில் அறியலாம். அவ்வாறே ஏழாம் திருமொழியில் தன் மகன் கண்ணனுடைய பிள்ளைப்பருவநிலைகளில் பெறும் இன்பத்தை இழந்தமைக் காக தேவகி புலம்புகிறாள் இவ்விரு திருமொழிகளிலும் இழவுபற்றிய அவலச்சுவை அமைந்திருக்கிறது.

திருவரங்கனை என்று காண்பேனோ? என்று குலசேகராழ்வார் உருகி, ஏங்குவதாக முதல் திருமொழி அமைந்துள்ளது; உலகினை வெறுத்து திருமாலுக்கே தான் அன்பு கொண்டொழிந்ததை-மையல் கொண்டொழிந்தகை மூன்றாம் திருமொழி (பெருமாள் திருமொழி) பேசுகிறது. திருவேங்கடமலையில் ஏதேனுமாகவேனும் பிறக்க வேண்டு வதை பெருமாள் திருமொழி—நான்காம் திருமொழியில் காணலாம். ஐந்தாம் திருமொழியில் திருமால் ஒருவனையே தான் சரணடைந்தும் அவன் தனக்கருளாது பாராமுகமாய் இருப்பதைச் சுட்டித் துயருருகின்றார். ஏழாம் திருமொழியில் கண்ணனாகிய குழந்தையின் பிள்ளைமையின்பத்தை இழந்து புலம்பும் தாய் தேவகியாக மாறிப் புலம்புகிறார். ஒன்பதாம் திருமொழியில் இராமனது பிரிவால் துன்பமுற்று வருந்தும் தந்தை தசரதனாக மாறி உள்ளம் வருந்தி உருகுகிறார். இவ்வாறு பெருமாள் திருமொழி முழுவதுமே சோகத்தில் சுகம் ஊட்டுவதாய் விளங்குகிறது.

வெகுளி என்பது கோபக்கொதிப்பாகும். இதனை, தண்டியார் "உருத்திரம்" என்பர்.[80] கோபம் கொண்ட வனையே அழித்துவிடும் அபாயத்தன்மையினது. அதனா லேயே முன்னோர்கள் "பொறுமையே பெருமை" என்று கூறிப்போந்தனர்,

பகைவர்கள் ஏதாவது தீங்கிழைத்துவிட்டால் அதனால் உள்ளம் கொதிப்பேறிக் குரோத உணர்ச்சிப் பெருக்கெடுக்கும், இது இயற்கை. இராமனாகிய தன்னுயிரைப் பிரித்து, தன்னை வேதனைக்குள்ளாக்கி, தீங்கிழைத்த கைகேசியின்மேல் தசரதன் கோபங்கொள் கின்றான். "அரும்பாவி" என்று அவளை ஏசுகின்றான். இரு நிலத்தில் இன்னும் இருக்கின்றாயே! என்று இகழ்கின் றான்.

அரும்பாவி சொற்கேட்ட வருவினையேன்
 என்செய்கே னந்தோ! யானே[82]

என்பெற்றாய்? கைகேசீ இருநிலத்தி
 லினிதாக விருக்கின் றாயே[83]

இப்பாசுர அடிகள் வெகுளிச்சுவைக்குத் தகுந்த சான்று களாய் விளங்குகின்றன.

## 6.9. ஒலிநயம்

ஒலிநயம் பாட்டு வடிவத்துக்கு இன்றியமையாத ஒன்று. பாட்டின் கருப்பொருளாய் நிற்கும் கவிஞனது உணர்ச்சிகள் படிப்போனை உணர்ந்து விரும்பி படிப்பதற்கு இந்த இசை நயம் பெரிதும் பயன்படுகிறது. பொதுவாகப் பக்திப் பாடல்கள் அனைத்திலும் ஓசைநயம் சிறப்பிடம் பெறுகின்றது.

பெருமாள் திருமொழியில் இவ்வொலிநயம் தக்கமுறை யில் அமைந்துள்ளது. ஆழ்வார் பாசுரம் தீட்டும்போது தான்பெற்ற உணர்ச்சியைச் சுவைப்போரும் பெறுவதற் கேற்றதான ஒலியமைப்பைப் படைத்துத் தீட்டியுள்ளார்.

பெருமாள் திருமொழி ஐந்தாம் திருமொழி, ஏழாம் திருமொழி, ஒன்பதாம் திருமொழிகளின் ஒவ்வொரு பாசுரமும் "ஏ"கார ஓசையுடன் முடிவடைகின்றது. குலசேகரரின் திருமாலுக்கே சரணடையும் திறம், தேவகி

புலம்பல், தசரதன் புலம்பல் என இம்மூன்று பாசுரங்களும் துயர உணர்ச்சியுடன் விளங்குகின்றன. "ஒலிநயத்தில் புலவன் உற்ற உணர்ச்சி இல்லை; ஆயின் அதன் சாயல் அமைந்துள்ளது எனலாம். அதைக் கொண்டு பாட்டைப் படிப்பவர் புலவருடைய உணர்ச்சியைப் பெறமுயல வேண்டும்"[83], என்பதற்கேற்ப பெருமாள் திருமொழிப் பாசுரங்களை நுகர்வோரும் குலசேகரரின் ஒலிநயம் அமைக்கும் சிறப்புத்திறத்தால் அவர் பெற்ற உணர்ச்சி களைப் பெற்று விளங்குகின்றனர். இதற்கான ஒருசில சான்றுகளை ஈண்டு காண்போம்.

......கேகயர்கோன் மகளாய்ப் பெற்ற
அரும்பாவி சொற்கேட்ட வருவினையேன்
என்செய்கே னந்தோ! யானே[84]

கிடக்கை கண்டிடப் பெற்றிலே னந்தோ
கேச வாகெடு வேன்கெடு வனே[85]

வண்ணச் செஞ்சிறுகைவிர லனைத்தும்
வாரி வாய்க்கொண்ட வடிசிலின் மிச்சல்
உண்ணப் பெறிலேன் ஓ! கொடு வினையேன்
என்னை யென்செய்யப் பெற்றதெம் மோயே[86]

## குறிப்பெண் விளக்கம்

1. நா. பார்த்தசாரதி, கவிதைக்கலை, முதற் பதிப்பு. (சென்னை, 1962), ப. 66.
2. பெ. சு. பாமணி, 'கலையும் வாழ்வும்' ஏ. எஸ். எஸ். எஸ். சங்கர பாண்டிய நாடார் முத்துவிழா மலர், (விருது நகர், 1966), ப. 130.
3. ஜே. முத்துவீராசாமி நாயுடு, இலக்கியச் செல்வி. முதற் பதிப்பு, (சென்னை, 1956), ப. 7.
4. ஆயகலைகள் அறுபத்து நான்கினையும்
ஏய உணர்விக்கும் என் அம்மை......
5. ஜே. முத்துவீராசாமி நாயுடு, இலக்கியச் செல்வி' ப. 6.
6. மேற்படி 8:7.
7. மு. வரதராசன், இலக்கியத்திறன், ப. 19. இரண்டாம் பதிப்பு, (சென்னை, 1965).
8. மேற்படி ப. 21.
9. மேற்படி ப. 14.
10. மேற்படி ப. 45.
11. சிதம்பர ரகுநாதன், இலக்கிய விமர்சனம், மூன்றாம் பதிப்பு, (சென்னை, 1964), ப. 11.
12. கழகப்புலவர் குழுவினர், (தொ. ஆ.), கழகத் தமிழ் அகராதி, இரண்டாம் பதிப்பு, 1969.
13. பெ. நடராசன், 'இலக்கியம் தரும் இன்பங்கள்' முருக தனுஷ்கோடி மணிவிழா மலர், (சென்னை, 1967), ப. 123.

14. இராமலிங்கம்பிள்ளை, இலக்கிய இன்பம், மூன்றாம் பதிப்பு, (சென்னை 1953),
15. க. கைலாசபதி, இலக்கியமும் திறனாய்வும், இரண்டாம் பதிப்பு, (சென்னை, 1976), ப. 20.
16. ச. வே. சுப்பிரமணியன், கம்பன் கற்பனை, முதற் பதிப்பு, (சென்னை, 1978), ப. 13.
17. க. த. திருநாவுக்கரசு, திருக்குறளில் கற்பனைத் திறனும் நாடக நலனும், முதற் பதிப்பு, (சென்னை, 1973), ப. 4.
18. மு. வரதராசன், இலக்கியத் திறன், ப. 171.
19. ச. வே. சுப்பிரமணியன், கம்பன் கற்பனை, ப. 37.
20. இரா. மாயாண்டி, சங்க இலக்கியத்தில் கற்பனை, முதற் பதிப்பு, (சென்னை, 1980), ப. 37.
21. ந. பிச்சமுத்து, திறனாய்வும் தமிழ் இலக்கியக் கொள்கைகளும், முதற் பதிப்பு, (சென்னை, 1983), ப. 83.
22. தெ. பொ. மீனாட்சி சுந்தரனார், சேக்கிழாரும் திருக்கண்ணப்ப நாயனாரும், 1955, ப. 29.
23. ந. தர்மாரெட்டி, திருவள்ளுவர் வேமனர் - ஓர் ஒப்பாய்வு, முதற் பதிப்பு, (திருப்பதி, 1984), ப. 201.
24. இ. சுந்தரமூர்த்தி, திருக்குறள் அணிநலம், முதற் பதிப்பு, (சென்னை, 1971), ப. 10.
25. பெரு. திரு. 1:6.
26. மேற்படி 2:8.
27. மேற்படி 7:6.
28. மேற்படி 4:10.
29. மேற்படி 10:8.
30. மேற்படி 1;6,

31. மேற்படி 9:6.
32. மேற்படி 9:3.
33. மேற்படி 10:.5
34. மேற்படி 7:7.
35. மேற்படி 9:6.
36. மேற்படி 1:2.
37. மேற்படி 1:4.
38. மேற்படி 1:6.
39. மேற்படி 10:1.
40. மேற்படி 5:8.
41. மேற்படி 6:2.
42. மேற்படி 6:7.
43. மேற்படி 9:3.
44. மேற்படி 10:5.
45. மேற்படி 9:4.
46. மேற்படி 9:8.
47. மேற்படி 1:1.
48. மேற்படி 5:2.
49. மேற்படி 5:3.
50. மேற்படி 8:7.
51. மேற்படி 4:3.
52. மேற்படி 1:6.
53. தண்டியாசிரியர், தண்டியலங்காரம், பன்னிரண்டாம் பதிப்பு, (சென்னை, 1978), நூற்பா. 84.
54. பெரு.திரு. 6:4.
55. தண்டியாசிரியர், தண்டியலங்காரம், நூற்பா. 36.
56. பெரு.திரு. 2:5.
57. மேற்படி 1:4.
58. மேற்படி 6:9.
59. மேற்படி 6:2, 7:7. 10:10.
60. மேற்படி 4:9.
61. மேற்படி 10:7.
62. மேற்படி 7:10.
63. மேற்படி 1:8.
64. மேற்படி 1:6.
65. மேற்படி 4:4.

66. மேற்படி 4:6.
67. மேற்படி 4:2.
68. மேற்படி 4:8.
69. மேற்படி 5:1.
70. மேற்படி 5:2.
71. மேற்படி 5.3.
72. மேற்படி 10:2.
73. மேற்படி 8:4.
74. மேற்படி 8:3.
75. மேற்படி 8:7.
76. மேற்படி 8:9.
77. மேற்படி 8:2.
78. தண்டியாசிரியர், தண்டியலங்காரம், நூற்பா. 70.
79. தொல்காப்பியம் பொருள். மெய். சூத்திரம். 3.
80. தண்டியாசிரியர், தண்டியலங்காரம், நூற்பா. 70.
81. பெரு. திரு. 9:5.
82. மேற்படி 9:8.
83. மு. வரதராசன், இலக்கியத்திறன், ப, 190.
84. பெரு திரு. 9:5.
85. மேற்படி 7:2.
86. மேற்படி 7:6.



# துணைநூற் பட்டியல்

## நூல்கள்


அருணாசலம், ப., பக்தி இலக்கியம்
தமிழ்ப் புத்தகாலயம்,
சென்னை,
முதற் பதிப்பு, 1973.

அரங்கசீனிவாசன், வைணவ தத்துவஞான அடிப்படைகள்,
திருவள்ளுவர் பதிப்பகம்,
திருச்சி, முதற்பதிப்பு, 1984.

அண்ணங்கராசாரியார், பிரதிவாதி பயங்கரம், ஆழ்வார்கள் வைபவம்,
க்ரந்தமாலா ஆபீஸ்,
காஞ்சிபுரம், 1956.

அண்ணங்கராசாரியார், பிரதிவாதி பயங்கரம் (உரை), முகுந்தமாலை,
க்ரந்தமாலா ஆபீஸ்,
காஞ்சிபுரம், 1974.

இரத்தின சண்முகனார், தெய்வவழிச் சிந்தனைகள்,
அருணோதயம், சென்னை,
முதற் பதிப்பு, 1977.

இராகவையங்கார், மு., ஆழ்வார்கள் காலநிலை,
பழனியப்பா பிரதர்ஸ்,
திருச்சி.

இராமலிங்கம்பிள்ளை, இலக்கிய இன்பம்,
பழனியப்பா பிரதர்ஸ்,
சென்னை,
மூன்றாம் பதிப்பு, 1953.

| | |
|---|---|
| ஏசுதாசன், ப.ச., | தமிழில் உவமை,<br>சுதா பதிப்பகம், திருச்சி, 1978 |
| கந்தசாமி, சோ. ந., | தமிழும் தத்துவமும்,<br>மணிவாசகர் நூலகம்,<br>சிதம்பரம்,<br>முதற் பதிப்பு, 1976. |
| கணேசன், பி.சி.,(தொ.ஆ.), | தெய்வ வழிச்சிந்தனைகள்,<br>வானதி பதிப்பகம், சென்னை,<br>முதற் பதிப்பு, 1978. |
| கணபதி, ரா., (தொ. ஆ.), | தெய்வத்தின் குரல்,<br>(முதற் பகுதி)<br>வானதி பதிப்பகம், சென்னை,<br>இரண்டாம் பதிப்பு, 1977. |
| கிருஷ்ணமூர்த்தி, அ., | இந்துமதத்தின் இரகசியங்கள்,<br>ஸ்ரீதேவி பதிப்பகம்,<br>கல்குறிச்சி,<br>முதற் பதிப்பு, 1979. |
| கிருஷ்ணவேணி அம்மையார், எஸ்., | செம்பொருள்,<br>திருமலை-திருப்பதி தேவத்தான வெளியீடு 1952. |
| கைலாசபதி, க., | இலக்கியமும் திறனாய்வும்,<br>பட்டாளிகள் வெளியீடு,<br>சென்னை,<br>இரண்டாம் பதிப்பு, 1976. |
| கோபாலகிருஷ்ண நாயுடு ஜ.டி., | ஆழ்வார்கள் அனுபவித்த அலர்மேல் மங்கை உறைமார்பன்,<br>மெர்க்குரி புத்தகக் கம்பெனி,<br>கோயமுத்தூர்,<br>முதற் பதிப்பு, 1973. |

கோபாலகிருஷ்ணமாசாரியர், உ.வே. வை.மு., (உரை.), — அஷ்டபிரபந்தம், (முதல் தொகுதி) வை.மு. கோபால கிருஷ்ணமாசார்யர் கம்பெனி, சென்னை, நான்காம் பதிப்பு, 1966

சஞ்சீவி, ந., (பொ.ப.ஆ.), — இந்திய விடுதலையும் தமிழ் இலக்கியமும், சென்னைப் பல்கலைக்கழக வெளியீடு, சென்னை, முதற் பதிப்பு, 1974.

சடகோபராமாநுஜாசாரியர், வை.மு. கோபால கிருஷ்ணமாசாரியர், வை.மு., — ஆழ்வார்கள் சரித்திரம், வை. மு. கோபாலகிருஷ்ண மாசார்யர் கம்பெனி, சென்னை, மூன்றாம் பதிப்பு, 1966.

சிவராமகிருஷ்ணசர்மா, சி.வி., — பக்தி—ப்ரபத்தி, திருமலை—திருப்பதி தேவத்தான வெளியீடு, திருப்பதி, முதற் பதிப்பு, 1983.

சிங்காரவேலனார். — தெய்வத் திரு அவதாரங்கள், அருணோதயம், சென்னை, முதற்பதிப்பு, 1981.

சிதம்பர ரகுநாதன், — இலக்கிய விமர்சனம், ஸ்டார் பிரசுரம், சென்னை, மூன்றாம் பதிப்பு, 1964.

சுவாமி சித்பவானந்தர் (த.ஆ.), — ஸ்ரீமத் பகவத்கீதை, தபோவனப் பிரசுராலயம், திருப்பராய்த்துறை, ஐந்தாம் பதிப்பு, 1964.

சுப்ரமணியபாரதியார், மகாகவி பாரதியார் கவிதைகள்
சுப்பிரமணியபிள்ளை பப்ளிஷர்ஸ், திருநெல்வேலி,
மூன்றாம் பதிப்பு, 1968.

சுப்பிரமணியஅய்யர்(ஏ.வி.), தமிழ் ஆராய்ச்சியின் வளர்ச்சி
அமுதநிலையம் லிமிடெட்,
சென்னை,
இரண்டாம் பதிப்பு, 1971.

சுந்தரமூர்த்தி, இ., திருக்குறள் அணிநலம்,
சென்னைப் பல்கலைக்கழகம்,
சென்னை,
முதற் பதிப்பு, 1971.

சுப்புரெட்டியார். ந., சோழநாட்டுத் திருப்பதிகள் (இரண்டாம் பகுதி)
ஆர்.வாசுதேவன்பப்ளிகேஷன்
முதற் பதிப்பு, 1981,

சுப்புரெட்டியார். ந., சோழநாட்டுத் திருப்பதிகள் (முதற் பகுதி)
ஆர். வாசுதேவன்
பப்ளிகேஷன்,
முதற் பதிப்பு, 1981.

சுப்புரெட்டியார், ந., திருவேங்கடமும் தமிழ் இலக்கியமும்
பாரி நிலையம், சென்னை,
முதற்பதிப்பு, 1975.

சுப்புரெட்டியார், ந., அறிவுக்கு விருந்து,
செந்தில்குமரன் பதிப்பகம்,
திருப்பதி,
இரண்டாம் பதிப்பு, 1975.

| | |
|---|---|
| சுப்புரெட்டியார், ந., | கவிதையனுபவம்,<br>கழக வெளியீடு, சென்னை,<br>முதற் பதிப்பு, 1961. |
| சுப்புரெட்டியார், ந., | தொண்டைநாட்டுத் திருப்பதிகள்,<br>எஸ்.ஆர். சுப்பிரமணிய பிள்ளை புத்தக வெளியீட்டாளர், சென்னை<br>முதற் பதிப்பு, 1973. |
| சுப்புரெட்டியார், ந., | வடநாட்டுத் திருப்பதிகள்,<br>ஆர். வெங்கடசுப்ரமணியம் பப்ளிகேஷன்,<br>முதற் பதிப்பு, 1980. |
| சுப்புரெட்டியார், ந., | சிலநோக்கில் நாலாயிரம்,<br>வாசுதேவன் பப்ளிகேஷன், சென்னை,<br>முதற் பதிப்பு, 1983. |
| சுப்பிரமணியன் ச.வே., | கம்பன் கற்பனை,<br>தமிழ்ப் பதிப்பகம், சென்னை<br>முதற் பதிப்பு, 1978. |
| சேஷாத்திரி, தி., | ஹிந்துமதம் (ஓர் அறிமுகம்),<br>அத்வய பிரசுரம், மதுரை,<br>இரண்டாம் பதிப்பு, 1975. |
| சோமசுந்தரம்பிள்ளை, ஜே.எம்., | தில்லைச் சிற்றம்பலவன் கோயில் சிதம்பரம்—தலவரலாறு,<br>அண்ணாமலை நகர், 1966. |
| ஞானசம்பந்தன், அ.ச. | தத்துவமும் பக்தியும்,<br>தெய்வத் தமிழ்மன்றம்,<br>மாயூரம், 1977. |

தர்மாரெட்டி, த., — திருவள்ளுவர், வேமனர்—ஓர் ஒப்பாய்வு,
திருவேங்கடவன் பல்கலைக் கழகம், திருப்பதி, முதற் பதிப்பு, 1984.

தண்டியாசிரியர், — தண்டியலங்காரம்,
கழக வெளியீடு, சென்னை, பன்னிரண்டாம் பதிப்பு, 1978.

தாமோதரன், கு., — ஆழ்வார் திருவுள்ளம்,
பூங்கொடி பதிப்பகம், சென்னை,முதற்பதிப்பு,1978.

திருமுருக கிருபானந்த வாரியார், — கண்ணன் கனியமுதம்,
வானதி பதிப்பகம்,சென்னை, முதற் பதிப்பு, 1974.

திருமுருக கிருபானந்த வாரியார், — வாரியார் வழங்கும் சிந்தனைச் செல்வம்,
வானதி பதிப்பகம்,சென்னை, முதற் பதிப்பு, 1975.

திருநாவுக்கரசு, க.த., — திருக்குறளில் கற்பனைத் திறனும் நாடக நலனும்,
சென்னைப் பல்கலைக்கழகம், சென்னை,முதற்பதிப்பு,1973.

நடராஜன், அ.லெ., (தொ.மொ.), — சுவாமி விவேகானந்தரின் அருள் மொழிகள் ஆயிரம்,
கற்பக நிலையம், சென்னை, முதற் பதிப்பு, 1978.

நடராஜன், எஸ்., — ஏழுமலை ஆண்டவன்,
பிரதிபா பிரசுரம், சென்னை, முதற் பதிப்பு, 1977,

| | |
|---|---|
| நடராஜன், எஸ்., | தசாவதார தத்துவங்கள், பிரதிபா பிரசுரம், சென்னை, முதற் பதிப்பு, 1979. |
| நாராயண வேலுப்பிள்ளை, எம்., | ஸ்ரீமத் பாகவத புராணம், குமரன் பதிப்பகம், சென்னை, முதற் பதிப்பு, 1982. |
| நாராயண வேலுப்பிள்ளை, எம்., | அவதார மகிமை, முகவைபதிப்பகம், சென்னை, முதற் பதிப்பு, 1979. |
| நாகராசன், கரு., | திவ்வியப் பிரபந்தத்தில் மனம், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, முதற் பதிப்பு, 1982. |
| ஸ்ரீநிவாஸாச்சாரியர், கிழாத்தூர், (தொ. ஆ.), | ஸ்ரீ விஷ்ணுஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம், தி லிட்டில் ப்ளவர் கம்பெனி, சென்னை, இரண்டாம் பதிப்பு, 1972. |
| பரமசிவானந்தம், அ.மு., | கவிதையும் வாழ்க்கையும், தமிழ்க்கலைப் பதிப்பகம், சென்னை, 1963. |
| பத்மநாபன், ஆர்., | ஸ்ரீவேங்கடேச்வரா, மூர்த்தி பப்ளிகேஷன்ஸ், சென்னை, முதற் பதிப்பு, 1978. |
| பரிமேலழகர், (உரை.), | திருக்குறள், கழகவெளியீடு, சென்னை, ஒன்பதாம் பதிப்பு, 1964. |

பாஸ்கரத்தொண்டைமான், தொ. மு., வேங்கடம் முதல் குமரிவரை, (பாலாற்றின் மருங்கிலே)
எஸ்.ஆர். சுப்பிரமணிய பிள்ளை பப்ளிஷர்ஸ், திருநெல்வேலி, 1964.

பாஸ்கர மார்த்தாண்டன், பொன்., வாழவைக்கும் வைகுண்டங்கள்,
அம்பாள் பதிப்பகம், சென்னை, முதற் பதிப்பு, 1984.

பார்த்தசாரதி, நா., கவிதைக் கலை,
வள்ளுவர் பண்ணை, சென்னை, முதற் பதிப்பு, 1962.

பாஷ்யம், தி., ஆழ்வார்கள் அமுதமொழி,
மணவாளன் பதிப்பகம், சென்னை, முதற் பதிப்பு, 1978.

பி.ஸ்ரீ., திவ்யப் பிரபந்த ஸாரம்,
அமுதநிலையம் பிரைவேட் லிமிடெட், சென்னை, மூன்றாம் பதிப்பு, 1957.

மணி. அ., ஆனந்தம்,
திருமலை—திருப்பதி தேவஸ் தான வெளியீடு, திருப்பதி, முதற் பதிப்பு, 1983.

மாருதிதாசன், இந்து சமயக் கருத்துக்கள்,
நர்மதா பதிப்பகம், சென்னை, முதற் பதிப்பு, 1981.

மாயாண்டி, இரா., — சங்கஇலக்கியத்தில் கற்பனை, எழிலகம், சென்னை, முதற் பதிப்பு, 1980.

மீனாட்சி சுந்தரனார், தெ. பொ., — குலசேகரர், சித்தார்த்தா வெளியீடு, மதுரை, இரண்டாம் பதிப்பு, 1978.

முத்துவீராசாமிநாயுடு, ஜே., — இலக்கியச் செல்வி, கழக வெளியீடு, சென்னை, முதற் பதிப்பு, 1956.

முத்துப்பிள்ளை, சி., — புகழ் மணக்கும் வைணவத் தலங்கள், பைலட் பப்ளிகேஷன்ஸ், சென்னை.

முத்துராசன், கு., — சேரமான் பெருமாள் நாயனா' பாடல்கள் - ஓர் ஆய்வு, செல்வி பதிப்பகம், கரூர். முதற் பதிப்பு, 1982.

முத்துக்குமரன், பி.எல்., — தசாவதாரம், மணிவாசகர் நூலகம், சிதம்பரம், முதற் பதிப்பு, 1979.

முத்துராமகிருஷ்ணன், வி.எஸ்., (தொ. ஆ.), — இந்திய ஸ்தல யாத்திரை, புக்ஸ் (இந்தியா) பிரைவேட் லிமிடெட், சென்னை, 1965.

ராம. சொ.,
திருத்தலப் பயணம்,
க.வெ.சித.வெ.
வேங்கடாசலம் செட்டியார்,
காரைக்குடி, 1966.

ராமகிருஷ்ணன், ஆர்.,
(த.ஆ.),
பக்திமார்க்கம்,
ஸ்ரீராமகிருஷ்ணமடம்,
சென்னை,
எட்டாம் பதிப்பு, 1971.

ஸ்ரீராமதேசிகாசார்யர்
(பரிசோ.),
சில்லரை ரஹஸ்யங்கள்
(முதற் பாகம்),
ராமஸ்வாமி ஐயங்கார்,
(பிர.), தஞ்சை, 1972.

ராமாநுஜதாதாசாரியார்,
அக்னிஹோத்ரம்,
வரலாற்றில் பிறந்த
வைணவம்,
ஸ்ரீசாரங்கபாணி சுவாமி
தேவஸ்தானம்,
கும்பகோணம், 1973.

வரதராசன், மு.,
இலக்கியத்திறன்,
பாரி நிலையம், சென்னை,
இரண்டாம் பதிப்பு, 1965.

வரதராசன், மு.,
தமிழ் இலக்கிய வரலாறு,
சாகித்திய அக்காதெமி,
புதுதில்லி,
முதற் பதிப்பு, 1972.

விரையன், க.,
கம்பனும் பக்தி இயக்கமும்,
தீபா பதிப்பகம்,
திருவெண்காடு,
முதற் பதிப்பு, 1979.

வேலுப்பிள்ளை, ஆ., தமிழர் சமய வரலாறு, பாரி புத்தகப்பண்ணை, சென்னை, முதற் பதிப்பு, 1980.

வேலுப்பிள்ளை, ஆ., தமிழ் இலக்கியத்தில் காலமும் கருத்தும், தமிழ்ப் புத்தகாலயம், சென்னை, முதற் பதிப்பு, 1969.

வேங்கடசாமி ரெட்டியார், கி., (ப.ஆ.), நாலாயிரம் திவ்வியப் பிரபந்தம் திருவேங்கடத்தான் திருமன்றம், சென்னை, முதற் பதிப்பு, 1973.

வைத்தியநாதன், எச்., வழிபாடும் சமயமும், தமிழ் எழுத்தாளர் கூட்டுறவுச் சங்கம் லிமிடெட், சென்னை, 1977. முதற் பதிப்பு,

ஸ்வாமி, ஸ்ரீ நாரத பக்தி சூத்திரம் விளக்கவுரை, பாரதி பதிப்பகம், சென்னை, முதற் பதிப்பு, 1984.

ஸ்வாமி, திருஅருள்மொழி, ஸ்ரீ ராமகிருஷ்ணமடம், சென்னை, ௬ றாம் பதிப்பு.

**கட்டுரைகள்**

குன்றக்குடி அடிகளார், 'சமய இலக்கியங்கள்' ஐந்தாம் உலகத்தமிழ் மாநாடு கருத்தரங்கு ஆய்வுக் கட்டுரைகள், தொகுதி-3 உலகத் தமிழாராய்ச்சி மன்றம், சென்னை, 1981.

சுப்புரெட்டியார், ந., 'வைணவ சமய நூல்கள்' தெய்வத்தமிழ், சென்னைப் பல்கலைக்கழக வெளியீடு, 1975.

ஜெயா, பி., 'மனிதனும் சமயமும்' இளவேனில், இளங்கோ மன்ற வெளியீடு, சென்னை, 1972.

**மலர்கள்**

அண்ணங்கராசாரியர், பிரதிவாதி பயங்கரம், 'அருளிச் செயலும் அருளாளனும்' திருவல்லிக்கேணி ஸ்ரீ பார்த்தஸாரதி ஸ்வாமி தேவத்தான வேதஅத்யாபக கோஷ்டி சிறப்பு மலர், 1985.

இராமசாமி அய்யங்கார், டி., 'ஸ்ரீவைணவம்' பொன்விழா மலர் இந்துமதாபிமான சங்கம், காரைக்குடி, 1967.

உமாதேவி, எஸ்., 'பக்தி' தூத்துக்குடி சச்சிதானந்த சபையின் வெள்ளிவிழா மலர், 1969.

கிருஷ்ணமாசாரியஸ்வாமி, 'இஷ்வாகு குலதனம்-ஸ்ரீ ரங்க நாதன்' 1985
சிறப்புமலர் வெளியீட்டு விழா.

நடராசன், பெ., 'இலக்கியம் தரும் இன்பங்கள்'
முருக தனுஷ்கோடி
மணிவிழா மலர்,
முருக தனுஷ்கோடி மணிவிழா மலர்க்குழு, சென்னை, 1967.

மணி, பெ.சு., 'கலையும் வாழ்வும்'
சங்கரபாண்டிய நாடார்
முத்துவிழா மலர்
சங்கரபாண்டிய நாடார் முத்துவிழா மலர்க் குழு, விருதுநகர், 1968.

வேங்கடசாமி, மு., 'திருமாலின் ஐவகைநிலைகள்'
பொள்ளாச்சி ஸ்ரீ வரதராஜப்
பெருமாள் கோவில்
கும்பாபிஷேக சிறப்பு மலர்,
ஸ்ரீவரதராஜப் பெருமாள் கோவில் வெளியீடு, பொள்ளாச்சி, 1970.


## இதழ்கள்


கல்கி, 21, ஏப்ரல் 1985.

ஸப்தகிரி, டிசம்பர் 1981
ஜூலை, அக்டோபர் நவம்புர் 1985.

## கலைக்களஞ்சியம்

கலைக்களஞ்சியம், தொகுதி-1, தமிழ் வளர்ச்சிக் கழகப் பதிப்பு, சென்னை.

## ஆங்கில நூல்

Swami Chinmayananda, Love Divine Narada Bhakti Sutra, Sree Tapovankuti, Uttar Kasi, 1968.



## அறிமுகவுரை

திருமதி ம. லோகநாயகி, எம்.ஏ., எம்.பில்., அவர்கள் என்னிடம் புதுமுக வகுப்பிலும் இளங்கலைப் பட்ட வகுப்பிலும் தமிழ் கற்றவர். திருத்தணிகையில் திரு. மதனகோபால், திருமதி சாரதாம்பாள் ஆகியோருக்கு மூத்த மகளாகத் தோன்றியவர்.

உயர்நிலை பள்ளியில் மாணவியாக விளங்கியபோதே தமிழில் ஆர்வங்கொண்டு கவிதை இயற்றுவதிலும் பேச்சுக் கலையிலும் ஈடுபட்டுவந்துள்ளார். பள்ளியிறுதி வகுப்பில் தமிழில் முதல்நிலையில் வெற்றிபெற்றார். திருத்தணி அருள்மிகு சுப்பிரமணிய சுவாமி அரசினர் கலைக்கல்லூரியில் இளங்கலைப் பட்ட வகுப்பில் கற்றபோது "மாபெரும் பத்தினி" என்னும் என் நாடகத்தில் இளங்கோவடிகளாகச் சிறப்புற நடித்துள்ளார்; பல கவியரங்கங்களில் பங்கேற்றுள்ளார்; இளங்கலைப் பட்ட வகுப்பில் தமிழில் முதல் நிலையில் வெற்றிபெற்று வள்ளல் திரு. சபாபதி ரெட்டியார் அவர்களிடமிருந்து பரிசுத்தொகை பெற்றார். திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் தமிழ் எம்.ஏ., படித்தபோது முதல்நிலையில் வெற்றிபெற்றுத் தங்கப் பதக்கம் பரிசாக ஈட்டியுள்ளார்.

தற்போது, 'குலசேகர ஆழ்வார் வளர்த்த பக்திப் பெரும்பயிர்' என்னும் எம்.பில்., ஆய்வு நூலை அச்சியற்றியுள்ளார். மேலும் தமிழுக்கு நற்றொண்டாற்றி பீடுடன் நீடுவாழ வாழ்த்துகிறேன்.

அன்புள்ள,

**டாக்டர் செ. உலகநாதன்**
எம்.ஏ., பிஎச்.டி.,

தமிழ்ப் பேராசிரியர் மற்றும்
சென்னைப் பல்கலைக் கழகப்
பேரவை உறுப்பினர்,
அருள்மிகு சுப்பிரமணிய சுவாமி
அரசினர் கலைக் கல்லூரி, திருத்தணி.